# ஸ்ரீராமாநுஜன் 141-142

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5.



1960 செப்டம்பர், அக்டோபர்மீ சார்வரிஸு புரட்டாசி, ஐப்பசிமீ

# ஸ்ரீ ராமாநுஜன் 141-142

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 12 | 1960ஆு ஸெப்டம்பர், அக்டோபர்மீ<br>சார்வரிஆு புரட்டாசி, ஐப்பசிமீ | மலர் 9, 10 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—32.

பாலரைப்போல் சீழ்கிப் பரனளவில் வேட்கையால் *
காலத்தால் தேசத்தால் கைகழிந்து *—சால
அரிதான போகத்தில் ஆசையுற்று நைந்தான் *
குருகூரில் வந்துதித்த கோ. (32)

| | |
|---|---|
| குருகூரில் | திருநகரியில் |
| வந்து உதித்த கோ | —வந்து அவதரித்த ஸ்வாமியான ஆழ்வார் |
| பாலரைப்போல் | விரும்பினபொருள் உடனே கைப்படவேணுமென்று அழுகிற பிள்ளைகளைப்போல |
| சீழ்கி | சினுங்கி |
| பரன் அளவில் வேட்கையால் | எம்பெருமான் பக்கலிலுள்ள ஆசையாலே |
| காலத்தால் தேசத்தால் கை கழிந்து | காலதேசங்களினால் கைகழிந்து போனதால் |
| சால அரிது ஆன | மிகவும் துர்லபமான |
| போகத்தில் | அநுபவத்தில் |
| ஆசை உற்று | ஆசை அதிகரிக்கப்பெற்று |
| நைந்தான் | வருந்தினர். |

* * *—ஆழ்வார் 'பாலனாய்' என்கிற திருவாய்மொழியில், சிறு பிள்ளைகள் ஏதேனுமொரு வஸ்துவை ஆசைப்பட்டு அதுவே வேணுமென்று பிடிவாதம் பிடித்துக் கதறுமா போலே, எம்பெருமானுடைய புராதனங்களான அபதானங்களில் ஆசை வைத்து, காலத்தாலும் தேசத்தாலும் அதீதங்களாயும் துர்லபங்களாயுமிருக்கிற போகங்களை விரும்பி அவற்றைப் பெறுவதற்காக ஆற்றாமைப் பட்டாரென்றவாறு.

கீழ் மூன்றும் பத்தில் *முடியானே யென்னுந்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான அவஸ்தை ப்ராஸங்கிகமான மூன்று திருவாய்மொழிகளாலே ஒருவாறு தலை மடிந்து கிடந்தது; இப்போது அது தலை யெடுத்து நிற்கின்றது. ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனுக்குச் சொன்னஹிதம் அவனுக்கு உபயோகப் படாமல் தனக்குப் பெருமாளைப் பற்றுகைக்கு உறுப்பானாப் போலவும், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் இரணியனுக்குச் சொன்னஹிதம் அவனது நெஞ்சிற் படாதே தனக்கு பகவத் பக்தி மிகுதற்கு உறுப்பானாப்போலவும் ஆழ்வார் செய்தருளும் பரோபதேசங்கள் பிறர்க்கு உறுப்பன்றிக்கே தமக்கு எம்பெருமான் பக்கலிலே அபிநிவேசம் மீதூர்ந்து செல்வதற்கே ஹேதுவாயிற்று. ஆகவே என்றைக்கோ கழிந்துபோன எம்பெருமான் படிகளை அக்காலத்திற்போலவே இன்று அநுபவிக்கப்பெற

வேணும் என்கிற விடாய் பிறந்தது. ஆசைப்பட்டபடியே கிடையாமையாலே, எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டியின் நிலைமையை யடைந்து தான் மோஹித்துக் கிடக்க, அவன்படியை அநுஸந்தித்த திருத்தாயார் பெண்பிள்ளையின் நிலைமையைப் பேசுகிற முகத்தாலே ஸ்வதசையை வெளியிடுவதாய்ச் செல்லுகிறது * பாலனாயேழுலகென்ற பதிகம்.

பீமஸேநன் ஒருகால் திருவடியைக் கண்டபோது "ஸாகரம் தர்த்து முத்யுக்தம் ரூபமப்ரதிமம் மஹத், த்ரஷ்டுமிச்சாமி தே வீர" என்றான். (அதாவது) 'நீ முன்பு கடல் கடந்த வடிவை நான் இப்போது காண விரும்பாநின்றேன்; காட்டவேணுமென்றான். அப்படிகாட்டவல்ல சக்தி மாருதிக்கு உண்டு என்று அறிந்தபடியாலே அங்ஙனம் அபேக்ஷித்தான்; அப்படியே ஆழ்வாரும் எம்பெருமானுடைய சக்தியை அறிந்தவராதலாலும் தம் அவாவின் மிகுதியாலும் என்றைக்கோ கடந்துபோனவற்றையும் இன்றுகாணப்பெற விரும்புவது பொருந்தியதே யென்ப. ... ... ... (32)

## திருவாய்மொழி நூற்றந்தாதி—33.

கோவான வீசன் குறையெல்லாந் தீரவே *
ஓவாத காலத் துவாதிதனை *—மேவிக்
கழித்தடையக் காட்டிக் கலந்த குணமாறன் *
வழுத்துதலால் வாழ்ந்ததிந்த மண். (33)

| | | | |
|---|---|---|---|
| கோ ஆன ஈசன் | ஸர்வசேஷியான எம்பெருமான் | காட்டி | ஸேவை ஸாதிப்பித்து |
| குறை எல்லாம் தீர | எல்லாக்குறைகளும் தீரும்படி | கலந்த குணம் | தம்மோடு கலந்த குணத்தை |
| ஓவாத காலத்து உவாதி தனை | விச்சேதமின்றி நடந்து செல்லுகிற காலத்தின் உபாதியை | மாறன் | நம்மாழ்வார் |
| மேவி கழித்து | தம்மோடுசேர்ந்து கழித்து | வழுத்துதலால் | துதித்ததனால் |
| அடைய | கீழ் அபேக்ஷித்த அபதானங்களை யெல்லாம் | இந்த மண் | இவ்வுலகம் |
| | | வாழ்ந்தது | ஸத்தை பெற்றது. |

* * *— * பாலனாயென்கிற கீழ்த்திருவாய்மொழியில் தேசகால விப்ரக்ருஷ்டங்களான தன்படிகளை அனுபவிக்க வேணுமென்று ஆசைப்பட்ட ஆழ்வார்க்கு, காலசக்கரத்தானாகையாலே காலோபாதியைக் கழித்து நிகழ்காலம் போலே ஆக்கிக் கொடுத்து, இவர் தம்முடைய ஸத்தையே தனக்கு எல்லாமாம்படியிருக்கிற தன் ப்ரணயித்வ குணத்தை அனுபவிப்பிக்கவே எல்லாம் பெற்றாராய் இந்தப்ரணயித்வ குணத்தை * கோவைவாயாள் பதிகத்தில் பாராட்டிக் கூறினவிதனால் இம் மண்ணுலகம் உய்வு பெற்றதென்றபடி. காலோபாதியைக் கழிப்பதாவது—இறந்த காலத்தில் கழிந்துபோனவற்றையும் தத்காலத்திற்போலே ஸாக்ஷாத்கரிக்கும்படியாகச் செய்துவைக்கை. "கலந்த குணமாறன்" என்றவிடத்து, குணம் என்பதை மாறனுக்கு விசேஷணமாக்கி, சிறந்த குணசாலியான நம்மாழ்வார் என்று பொருள்கொண்டு, கலந்தகுணமாறனை வழுத்துதலால் இந்த மண் வாழ்ந்தது என்று உரைப்பாருமுளர். வாழ்ந்தது—வாழும் என்று எதிர்காலப் பொருள் கொள்ளவும் தகுதியுண்டு; விரைவுபற்றிய வழுவமைதி.

கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டபடியே எல்லாம் பெறும்படி எம்பெருமான் இவரோடே கலந்து, தன்னுடைய பரமப்ரணயித்வத்தை வெளியிட்டுக் கொண்டான்; அதுகண்டு மிகவும் உவந்த ஆழ்வார் அந்த ப்ரணயித்வ குணத்தை * கோவைவாயாள்

திருவாய்மொழியிலே பேசுகிறார். இத்திருவாய்மொழியை நம் பூருவாசாரியர்கள் மூன்று படியாக நிர்வஹிப்பர்கள். (1) சந்திரனைப்பிடித்துத் தரவேணுமென்று அழுகிற குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து அழுகையை மாற்றுவதுண்டே; அதுபோலே, கீழ்த் திருவாய்மொழியில் தேசகால விப்ரக்ருஷ்டங்களைப் பெறவேணுமென்று ஆசைப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஒரு குணாநுபவத்தைப் பண்ணிவைக்க, அத்தாலே, கீழ்ப்பிறந்த இழவையெல்லாம் மறந்து அந்த குணத்தையே அனுபவிக்கிறார் என்று எம்பார் அருளிச் செய்யும்படி. (2) காலத்தால் தேசத்தால் கைகழிந்தவற்றை யனுபவிக்க ஆசைப்பட்ட ஆழ்வாருடைய திருமுக மண்டலத்தை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் அபேக்ஷித்த படியே செய்யக்கடவோம் என்று ஒருவார்த்தை சொல்ல, அதுகேட்டுக் களித்துக் கீழிழவை மறந்து க்ருதார்த்தராகிறார்—என்று திருமலை நம்பி அருளிச்செய்யும்படி. (3) எம்பெருமான், ஆழ்வார் அபேக்ஷித்தபடியே செய்து தலைக்கட்ட வல்லவனாகையாலே (அதாவது) காலம் தானிட்ட வழக்காம்படி கால நிர்வாஹகனாகையாலே காலோபாதியைக்கழித்து, அதீத காலத் திற்போகங்களையும் நிகழ் காலத்திற் போலே ஒரு போகியாக் கிக்கொடுக்க அவற்றையநுபவித்து மகிழ்கிறார்—என்று பட்டர் அருளிச் செய்யும்படி.

அபேக்ஷித்த போகங்களைத் தாராமல் ஏதோ வொரு குணத்தையநுபவிப்பிக்க. அதனாலே களித்துப் பேசுகின்றாரென்பது எம்பாருடைய நிர்வாஹம். அபேக்ஷித்த போகங்களைத் தாராவிட்டாலும் தருவதாக முகம் நோக்கி, வாயினாற் சொல்லி மகிழ்வித்தானெம் பெருமான் என்பது, திருமலைநம்பியின் நிர்வாஹம். அபேக்ஷித்த படியே அநுபவிப்பித் தருளினனென்பது, பட்டருடைய நிர்வாஹம். இங்ஙனே மூன்றுபடியாகவும் நிர்வஹிக்க ஔசித்தியமுண்டு என்று தெரிவித்தவாறு. .... ... .... ... (33)

---

ஶ்ரீமதே வராஹாத்மனே நம:.

# வேதபாஷ்ய விமர்சநம்.

ஶ்லோ॥ தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணேஷு ஸாயணாசார்ய விநிர்மிதே ।
பஶ்வாதௌ நாமாவஶ்யஸ்ய ஸமர்த்யதாத்மவாதயே ॥

ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் பாகுபாடுற்ற வேதத்தில் ப்ரஹ்ம காண்டமாகிய உபநிஷத்துக்களுக்கு பாஷ்யமியற்றினவர்கள் கர்மகாண்டத்திற்கு பாஷ்யமியற்றவில்லை. அதற்கு பாஷ்யமியற்றினவர்கள் உபநிஷத்துக்களுக்கு பாஷ்யமியற்றவில்லை. தைத்திரீயோபநிஷத்தானது கர்மகாண்டத்தினுள்ளீடான ஆரண்யகத்தில் சேர்ந்திருப்பதனாலே இதற்கு பாஷ்யமியற்றுவது அவர்ஜநீயமாக ப்ராப்தமாயிற்று. இதனால் உபநிஷத் பாகத்திற்கு பாஷ்யமியற்றினதாக ஆகாது. அதை இயற்றினவர்கள் இதை ஏன் இயற்றவில்லை? என்று கேட்பதற்கு யாருக்கும் அதிகாரமில்லாமையாலே இக்கேள்வியை விட்டிடுவோம்.

இந்த பாஷ்யங்களைப்பற்றிச் சில விஷயங்கள் தெரிவிக்க விரும்புகிறோம். நமக்கு ப்ரவேஶமுள்ளது யஜுர்வேதத்திலாகையாலே அதைக் கொள்ளுகிறோ மிங்கு. கர்மகாண்டமானது அசீதியென்றும் அசீதித்வயமென்றும் வழங்கப்படுகிறது. அசீதியென்றால் எண்பது ப்ரச்ன மென்றபடி. அசீதித்வயமென்றால் எண்பத்திரண்டு ப்ரச்நமென்றபடி. மந்த்ரப்ரச்நமிரண்டைச் சேர்க்காமல் அசீதி யென்கிறது. அதையும் சேர்த்து அசீதித்வயமென்கிறது. எட்டு ப்ரச்னமாகிய ஆரண்யகத்தை ஸ்ரீ வைஷ்ணவேதரர்கள் பத்துப்ரச்நங்களாகக் கொள்ளுகையாலே மந்த்ரப்ரச்நத்தைத் தவிர்த்தே அசீதித்வயமென்பது அவர்களின் பக்ஷத்திலே பொருந்தும். இதில் இப்போது சர்ச்சை வேண்டா.

கர்மகாண்டத்திற்கும் உபநிஷத் பாகத்திற்கும் ஒரு வாசியுண்டு; கர்மகாண்டத்தில் ப்ராஹ்மணம் தவிர மற்ற ஸம்ஹிதாபாகத்திற்குப் பதபாடம் அநாதியாக ஏற்பட்டிருக்கிறது. உபநிஷத் பாகத்திற்கு அது கிடையாது. ஸம்ஹிதைக்குப் பதபாடம் மட்டுமேயன்று; க்ரமம் ஜடை கநம் இத்யாதிகளும் ஏற்பட்டிருக்கின்றன. ப்ராதிஶாக்யாதி லக்ஷணங்களும் அமைந்திருக்கின்றன. உபநிஷத் பாகத்திற்கு இவை எதுவும் கிடையாது. க்ரமம் ஜடை கநம் இவைகளுக்குத் தாயானது பதபாடம். அந்த பதபாடம் பௌருஷேயமா? அபௌருஷேயமா? என்கிற விசாரம் வைதிக கோஷ்டிகளில் இருந்து வருகிறது. பௌருஷேயமென்று பலர் கொள்ளுகிறார்கள். நம்முடையகொள்கை அங்ஙனமில்லை. நாம் எழுதுகிற நூல்களில் ‘வஷகாரவரவஹ’ என்றெழுதுவது வழக்கம். மூலத்திலேயே சில பல பாகங்களைப் பௌருஷேயங்களாகச் சொல்லுகிற வாதம் கிடக்கையில் பதபாடத்தைப் பற்றி என்ன விசாரம். புருஷப்ரணீதமென்றாலும் அந்த புருஷர் பரமபுருஷனோடு விகல்பிக்கத் தகுந்தவராகவே யிருப்பர். அவருடைய காலம் நம்முடைய புத்திக்கு எட்டாததேயாகும். இது நிற்க.

மூலத்திற்கு பாஷ்யம் செய்பவர்கள் பதபாடத்தை அணுவளவும் அதிக்ரமியாமலே அதற்கிணங்கவே செய்தாக வேண்டுமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இதை யாரும் மறுக்ககில்லார். ஸ்ரீராமாயணஸூக்திகளுக்கு வியாக்யானம் செய்பவர்கள் ஸ்வேச்சயா பதவிபாகம் செய்துகொண்டு பொருளெழுதுவதைப் பார்க்கின்றோம். ஓரிரண்டிடமே காட்டுவோமிங்கு; “தேவநேந வநம் கதா” என்றவிடத்தில் தே, வநேந என்று பதச்சேதம் செய்து வியாக்கியானம் பண்ணுவதுபோல ‘தேவநேந’ என்று ஒரேபதமாகக் கொண்டு வியாக்கியானம் செய்யப்படுகிறது. காலால் நடந்து செல்லுகையைத் தேவநமென்பதாம். “அஹம் தாவந் மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே” என்னுமிளையபெருமாள் வாக்யத்தில் அஹம், தாவத் மஹாராஜே என்கிற பதவிபாகமிருக்கச் செய்தேயும் “அஹந்தாவந்மஹாராஜே” என்று ஒரேபதமாக வைத்துப் பொருளுரைப்பாருமுளர். அஹந்தா அஸ்யாஸ்தீதி அஹந்தாவாந்; ஸ சாஸௌ மஹாராஜஶ்ச—அஹந்தாவந்மஹாராஜ: என்று விக்ரஹித்து, அஹந்தையையுடைய தசரதசக்ரவர்த்தி பக்கலிலே என்று பொருளாம். (அஹந்தையாவது—அஹங்காரம்.) இங்ஙனே யெடுத்துக் காட்டக்கூடியவை அபரிமிதமாகவுண்டு.

இப்படி ஸ்வச்சந்தமாக பதவிபாகம் பண்ணி அர்த்தமுரைப்பதை வேதம் ஸஹிக்குமதன்று. அசைக்கவொண்ணாதபடி பதபாடம் ஏற்பட்டிருப்பதனால் அதை யநுஸரித்தே பாஷ்யம் இயற்றவேண்டியது கடமையாகும். நாலாவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில் ஸுவஷட்காழ என்றொருபதம். பதமோதாதவர்கள் இதை இரண்டு பதமாகக் கொள்ளாமற்போனாலும், ஸுபித்ரா:, ஸுவயா, ஸுமழ இத்யாதிகளிற்போல ஸௌஹநாய்யகமான

(ஸ) சேர்ந்திருப்பதாகவே கருதிவிடக்கூடும். ஆனால் பதபாடத்தில் 'ஸுவஷ இதி ஸுவ: ஷாஃ' என்று ஓதப்பட்டு வருகிறதென்பதைத் தெரிந்துகொண்டவர்கள் அங்ஙனம் கருதார்கள். 'ஸுவேவாவஸாநா' என்றொரு பதம். இதில் ஸம்பமும் அவஸாநமும் சேர்ந்திருப்பதாக ஆபாத ப்ரதீதி ஏற்படும். 'ஸுவேவாவஸாநேதி ஸு—உவாவஸாநா.' என்றுள்ள பதபாடத்தினால் அந்த மருள் நீங்கும். ஆக, பதபாடம் அர்த்தநிர்ணயத்திற்குப் பரமோபகாரகமென்று தேறும்.

பதபாடம்போலவே ஸ்வரஸந்நிவேஶமும் அர்த்தநிர்ணயத்திற்கு மிகவும் கைகொடுப்பதாகும். இதற்கும் சிறிது காட்டுகிறோம். தே என்பது ஓரெழுத்தான ஒரு பதம். இது தச்ஶப்தத்தில் ஸ்த்ரீலிங்க நபும்ஸகலிங்கங்களில் ப்ரதமாத்விதீயாவிபக்திகளில் த்விவசநாந்தமாயும் பும்லிங்கத்தில் ப்ரதமாபஹுவசநாந்தமாயும், யுஷ்மச்சப்தத்தில் (துப்யம்) தே, (தவ) தே. என்றுமுள்ளது. இத்தனை ரூபங்களும் வேதத்தில் அடிக்கடி ஓதப்படுகின்றன. இப்பதம் அநுதாத்த ஸ்வரயுக்தமாயிருந்தால் யுஷ்மச்சப்த ரூபமென்று நிர்ணயிக்கப்பெறும். உதாத்த ஸ்வரயுக்தமாயிருந்தால் தச்சப்தரூபமென்று நிர்ணயிக்கப்பெறும். அதுதன்னிலும் த்விவசநரூபமும் பஹுவசநரூபமுமான வாசியுமிருப்பதால் பதபாடம் அதையும் விளக்கிக்கொண்டு தோன்றியிருக்கின்றது. த்விவசநரூபமான ஸ்தலங்களில் மட்டுமே 'தே இதி' என்று பதமோதப்படும். பஹுவசந ரூபமாயிருந்தால் அங்கு இதியோமம் இருக்கவே மாட்டாது ஆக, இதில் உதாத்த ஸ்வரத்தைக்கொண்டு தச்ஶப்தமென்றும், அநுதாத்த ஸ்வரத்தைக் கொண்டு யுஷ்மச்சப்த ரூபமென்றும் நிர்ணயிக்கலாகிறது.

யத: என்பது ஒருபதம். இதுவும் வேதத்தில் அடிக்கடி வரும். இதில் முதலெழுத்து உதாத்தமாக விருப்பது பலபலவிடங்களில்; அது அநுதாத்தமாயிருப்பது சிற்சில விடங்களில். உதாத்தமாயிருந்தால் (யஸ்மாத்) என்று அர்த்தமுள்ள அவ்யயமாகும். * யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே * இத்யாதிஷ்விவ. அநுதாத்தமாயிருந்தால் (யஜ யத்நௌ யத:) என்று உணாதிதௌ என்கிற யாதுவில் ஶத்ருப்ரத்யயாந்தமாகத் தேறுகிற யச்ஶப்தத்தின் த்விதீயாபஹுவசநாந்த ரூபமாகும். 'ஸுவர்கம் லோகம் யத:' என்றுவரும். அவ்விடங்களில் ஸ்வர்க லோகத்தை யடைகின்றவர்களை என்று பொருள்படும் (யத:) என்கிற விது பஞ்சமீஷஷ்டீ விபக்திகளில் ஏகவசந ரூபமாகத் தேறுவதுமுண்டு. (யதாம்) என்று ஷஷ்டீபஹுவசநரூபமும் வேதத்தில் ஓதப்பட்டு வருகிறது. எனினும், (யத:) என்கிற பதம் ஸ்வரபேதத்தினால் அர்த்தபேதத்தை யுடையதென்று காட்டுவது இங்கு முக்கியம். இங்ஙனே ஸ்வரவாசியினால் பொருள்வாசியுள தென்பதற்கு எடுத்துக்காட்டக்கூடிய இடங்கள் ஓரிரண்டல்ல; அனேகமுண்டு. ஸ்தாலீபுலாகந்யாயேந ஸ்வல்பமே இங்கெடுத்துக்காட்டினோம்.

பதபாடத்தில் வேஷ்டநம் (அதாவது சுவறு ஹம்) என்பது மொன்று. ப்ரஜாவதிரிதி ப்ரஜா—வதி:; ஹாமயெயெநேதிஹாம—யெயெந' என்றிப்படி பிரித்தோதுவதுதான் வேஷ்டநமெனப்படுவது. ஒருபதத்திற்கு ஓரிடத்தில் வேஷ்டநமோதப்படும்; அதே பதத்திற்கு மற்றோரிடத்தில் அது ஓதப்படாது. 'வாஜயந்த:' என்றொரு பதம். இதற்கு ஓரிடத்தில் வாஜயந்த இதி வாஜ—யந்த: என்று வேஷ்டநமோதும். மற்றோரிடத்தில் அது இல்லை. இதற்கு இப்பதத்தில் ஸ்வரபேதம் நியாமகமாகும். எங்ஙனே யென்னில், வாஜயந்த: என்பதில் மூன்றாமெழுத்தான யகாரம் உதாத்தமாக வருவது சிலவிடங்களில்; அதுவே ஸ்வரிதமாகவருவது சிலவிடங்களில். உதாத்தமாக வருமிடங்களில்தான் வேஷ்டநமுண்டு.

ஸ்வரிதமாக வருமிடங்களில் அது கிடையாது. இந்த ஸ்வரபேதத்திற்கும் அர்த்தபேதமே காரணம். அர்த்தபேதமில்லாமல் அநாவச்யகமாக ஸ்வரபேதம் வேதத்தில் காணப்படமாட்டாது.

ஆக, வேதத்திற்குப் பொருள்காணவேண்டில் பதபாடத்தையும் ஸ்வரஸந்நிவேசங்களையும் உற்று நோக்கியே அவற்றுக்குப் பொருள்கண்டு உரைக்கவேணுமென்றும், பதபாடத்திற்கும் ஸ்வரப்ரக்ரியைக்கும் சேராதபடி உரைப்பது வேதார்த்தமன்று என்றும் மூதலிக்கப்பட்டதாயிற்று.

இனி, இப்போது அவதரித்திருக்கிற வேதபாஷ்யங்களின் பரிஸ்திதி எப்படிப்பட்டதென்று பார்ப்போம். பார்க்குமளவில் பதபாடத்திற்குப் பொருந்தாமலும் ஸ்வர ப்ரக்ரியைக்குச் சேராமலுமே வேதபாஷ்யங்கள் அவதரித்திருக்கின்றன வென்று நாம் கண்ட பல விஷயங்களில் சில விஷயங்களை மட்டும் இங்கு நிரூபிக்கிறோம். இது வேதபாஷ்யகாரர்கள் மீது குற்றங்குறை கூறுமெண்ணத்தினாலன்று. தத்வ ஜிஜ்ஞாஸயா அத்தனை.

நம்முடைய வேதத்திற்கு ஸாயணர் பட்டபாஸ்கரர் என்னுமிருவர் பாஷ்யமியற்றினவர்கள். பட்டபாஸ்கரர் முற்பட்டவரென்றும், ஸாயணர் பிற்பட்டவரென்றும் சொல்லுகிறார்கள். பட்டபாஸ்கர பாஷ்யம் மிகவும் ஸம்க்ஷிப்தமானது. ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்திற்கும் ப்ராஹ்மணத்தில் இரண்டாவது அஷ்டகத்திற்கும் பட்டபாஸ்கர பாஷ்யம் கிடைத்திலது. ஸாயணருடையது சிறிது விசதமான பாஷ்யமாகையாலே முன்னம் இதிலே நம்முடைய விவக்ஷிதங்களைத் தெரிவிக்கிறோம்.

பதபாடத்திற்குச் சேராத பாஷ்ய ஸ்தலங்களில் சிலவற்றை யெடுத்துக் காட்டுகிறோம். ஐந்தாவது காண்டம் முதல் ப்ரச்நத்தின் முடிவில் * யாஹி ஸாயுஜ்யா ஹவிரதந்தா தேவா:* என்றுள்ளது. இங்கு (ஸாயுஜ்யா ஹவி:) என்ற விடத்தில் ஸாயுஜ்யா: என்று விஸர்காந்தமாகவும் பதம் பிரிக்கலாம்; ஸாயுஜ்யா என்று விஸர்கமின்றிக்கே ஆகாராந்தமாகவும் பதம் பிரிக்கலாம். ஆனால் பதம் பிரிப்பது நம்மிஷ்டமன்றே; அநாதியான பதபாடம் இங்கு எப்படியுள்ளதென்று பார்க்கவேணும். பார்க்குமளவில் (ஸாயுஜ்யா) என்று விஸர்கமின்றிக்கே ஆகாராந்தமாகவேயுள்ளது. (ஸாயுஜ்யா வை தேவா:) என்றுள்ள பிறவிடங்களிலெல்லாம் (ஸாயுஜ்யா:) என்று விஸர்காந்தமாகவே பதபாடமுள்ளது. அது தேவா: என்பதற்கு விசேஷணமாகிறது; அவ்விடங்களில் 'வஜநீயா தேவா:' என்று பொருளுரைத்திருப்பது பொருத்தமானதே. 'ஸாயுஜ்யா ஹவிரதந்தா தேவா:' என்றவிடத்திலும் அப்பொருளையே ஸாயணர் உரைத்திருப்பது பொருந்துவதற்கு வழியில்லை. விஸர்கமின்றிக்கே பதபாடம் வந்திருப்பதை அவர் அறிந்தும் ஆலோசித்து மிருந்தாராகில் இப்படியுரைத்திருக்கமாட்டார்.

இங்கு உண்மையான பொருளென்னவென்றால்; பட்ட பாஸ்கரபாஷ்யத்தில் அஃது உரைக்கப்பட்டுள்ளது. ஸாயுஜ்யா என்பதை தேவர்களுக்கு விசேஷணமாக்காமல் கீழே 'ஸாஹாகாரேண ஹவிஷா' என்றவிடத்திலுள்ள ஹவிஸ்ஸுக்கு விசேஷணமாக்கி (ஸாயுஜ்யா ஹவிஷா—ஸாயுஜ்யேந ஹவிஷா) என்றுரைத்தனர் முன்னம். இது ஸ்வரஸமான அர்த்தமன்று என்று தாமே கருதி ஸாயுஜ் என்னுமர்த்தத்தைப் பக்ஷாந்தரமாக வுரைத்தார். இதுதான் பொருத்தமான பொருள். அதேகாண்டத்தில் மேலிரண்டாவது ப்ரச்நத்தின் முடிவில் "சூளஸ்ஸேந்நக்ஷத்ரைஸ்ஸஹ ரூவம் க்ருணோது ஸாயுஜ்யா" என வருகின்றது. அங்கு ஸாயுஜ்யா என்பது முழுப்பதம். அதற்கு ஸாயுஜ் என்பதுதான் அர்த்தம். அந்த பக்ஷமே

ஶ்ருதவிவாத ஸ்தலத்தில் உகாரமொவெ ந ஸாயதா என்றாகியிருக்கிறது. இதற்கு ஸாயி தெந என்கிற அர்த்தம் அவ்வளவு ஸ்வரஸமன்று. ஸாய—யயாதயா ஹவிஷஶ் என்னு மர்த்தமே மிகப் பொருத்தமானது. ஆனாலும் ஸாயிதெந என்கிற அர்த்தத்தில் பதபாட விரோதம் யாதும் சொல்லப்போகாது. ஸாயணர் உரைத்திருக்கிற பொருள் ஸர்வாத்மநா ஸங்கதமன்று என்பதை வைதிகர்கள் யாவரும் இசைவர்கள்.

ஸாயதா: என்னவேண்டுமிடத்தில் (ஸாயதா) என்று பதபாடம் வந்திருப்பதை ஶாக வ்யத்யயமாகக் கொண்டு பாஷ்யத்தைப் பொருந்தவிடலாமென்று ஸஹஸா சிலர் சொல்லி விடக்கூடும். மூலத்தில் எத்தனை வ்யத்யயங்களிருந்தாலும் பதபாடத்தில் வ்யத்யயம் கிடை யவே கிடையாதென்பது பற்றி நம்முடைய விபுலநிரூபணம் வெதாத்ய யநஸவ-ஸ்வாதிகளில் வெற்றிபெற்றிருக்கின்றது என்னுமிவ்வளவையே இங்குச் சொல்லி நிற்போம்.

இன்னேரிடத்திற் செல்வோம். நாலாவது காண்டம் முதல் ப்ரஶ்நத்தின் முடிவில் “ப்ரவஶவ ஜெவிதரா......ஸதநெஜதஸ்ய” என்றுள்ளது. இங்கு ஸதநெ என்கிற பதம் ஸப்தம்யந்தமென்று ஶிக்ஷா வொன்றுமைக்காக வதவாக்யத்தில் (ஸதநெஜதி) என்று ப்ருஹம் ஓதப்பட்டு வருகின்றது. க்ரமத்தில் (ஸதநெ ஜதி ஸதநெ) என்று ஓதுவர்கள். இவற்றால் இது த்விவசநாந்த பதமென்பது திடமாக்கப்பட்டது. இது ஸப்தம்யந்தபதமன்று என்பது நிர்விவாதம். ஆனால் இவ்விடத்தில் ஸாயணர் “ஜதஸ்ய ஸதநெ-யஜ்ஞஸ்தாநெ” என்று ஸப்தம்யந்தமாகக் கொண்டே பாஷ்யமிட்டிருக்கின்றார். பதபாடத்தை நோக்கி யிருந்தால் இப்படியுரைத்திருக்க ப்ரஸக்தியிராது.

மற்றுமோரிடம் செல்வோம். அதே காண்டத்தில் இரண்டாவது ப்ரஶ்நத்தில் “ஸஹ ஸ்ரியம்வாஜஜத்யம் ந ஸஸ்திம் ஸஸவாந்” என்றுள்ளது. இங்கு (ஸஸவாந்) என்கிற பதத் திற்கு (ஸஸவாந் ஜதிஸ — ஸவாந்) என்று வேஷ்டநமோதப்பட்டு வருகிறது. இதற்கு ஸாயணர் (ஸஸவாந் ஸந—த்தவாந் ஸந) என்று உரைத்திருக்கின்றார். இதற்கு இப்படி அர்த்தமிருந்தால் ஸஸவாநிதி ஸ—ஸவாந் என்கிற வேஷ்டந பாடத்திற்கு அவகாஶமிராது. வைதிக வித்வான்கள் இதை மிகவும் விமர்ஶிக்கவேணும்.

இன்னுமோரிடத்திற்குச் செல்வோம். இதேகாண்டத்தில் மூன்றாம் ப்ரஶ்நத்தின் முடிவில் “தெ கீயொ ய—நயொ ஹாஜத்ருஷ்ய:” என்றுள்ளது. இங்கு (ஹாஜத்ருஷ்ய:) என்பதற்கு “ஹாஜ: தீஷ்தி: வித்ய—த—வா த்ருஷி: யெஷாம்தெ ஹாஜத்ருஷ்ய:” என்பதாக ஸாயண பாஷ்யவாக்யம். ஹாஜ வதத்திற்கும் த்ருஷிவதத்திற்கும் ஸமாஸம் வந்திருப்பதாகக் கொண்டு இங்ஙனே உரைத்திட்டார்; பதபாடம் இதற்கு நேர்விரோதமானது. (ஹாஜ த்ருஷ்யஜதி ஹாஜக—ஷ்ய:) என்று ஓதப்பட்டு வருகின்றது. இப்படியிருக்க ஹாஜமும் த்ருஷியும் பாஷ்யகாரருக்கு எங்கிருந்து வந்து புகுந்தன வென்பது தெரியவில்லை.

பிறிதோரிடத்திற்குச் செல்வோம். ‘வாஜயஷ:’ என்கிற பதத்தைப்பற்றி முன்னமே சிறிது ப்ரஸ்தாவம் செய்திருக்கிறோம். இதிலும் ஸாயணர் பிறழ்ந்திருப்பதை இங்கெடுத்துக் காட்டுகிறோம். முதல் காண்டத்தில் மூன்றாவது ப்ரஶ்நத்தின் முடிவான அநுவாகத்திலும், அதே காண்டத்தில் நாலாவது ப்ரஶ்நத்தின் முடிவான அநுவாகத்திலும் வாஜயஷ: என்கிற இப்பதம் வருகிறது. முந்தின இடத்தில் [* ஸுஶ்லாஃ வாஜஃஸி வாஜயஷ: * என்னுமிடத்

தில்] யகாரம் ஸ்வரித ஸ்வரமுடையது. இதற்கு வேஷ்டநம் கிடையாது. பிந்தினவிடத்தில் [* ஸுயா வாஜம் வாஜயனோ ஜயே8 * என்னுமிடத்தில்] யகாரம் உதாத்த ஸ்வரமுடையது; இதற்கு வேஷ்டநபாடமுண்டு. வாஜயஞ ஊதி வாஜ—யஞ: என்று பதபாடம் ஜகத் ப்ரஸித்தமானது. இதில் ஸ்வாஹெ8த்தையும் ஸுவ௰ ஹாஹாவ தத்ஹாவங்களேயும் யாரும் அபலபிக்கமுடியாது. இதற்கு அர்த்தபேதம் இருந்தே தீரவேண்டும். ஆனல் அர்த்தபேதம் காட்டவே யில்லே. வாஜழ ஸஹ்ழ ஸூத்ந ஊஹூ: என்கிற பொருளேயே இரண்டிடத்திலும் ஸமரூபமாகச் செய்திருக்கிறர். இது பொருந்துவதற்கு வழியில்லே. பட்டபாஸ்கரரும் இரண்டிடத்திலும் ஏகரூபமான அர்த்தத்தையே எழுதிவிட்டாரெனினும் அவர் சிறிது விழித்துக்கொண்டார். முந்தின இடத்தில் "ஷாநவ௰ஹௌ 8–வ ஃடௌ" என்றெரு வாக்யமெழுதியிருப்பதைக் காணலாம். ஸ்வாஹெ8த்தையும் வெஷ்நாஹாவதத்ஹாவங்களேயும் கவனித்தாரவர்.

இதே பதம் நாலாவது காண்டத்திலும் இரண்டிடங்களில் வருகிறது. ஸ்வரபேதம் வேஷ்டநபேதம் என்பது அங்குமுள்ளது. அதில் இரண்டாம் ப்ரச்நத்தில் முடிவான அநுவாகத்தில் "ஸஹஸ்ரா ஸஹஷா வாஜயஞா" என்றுள்ளது. வாஜயஞா என்றது வாஜயஞௌ என்றபடி. வஅநஹெ8 மொழிய வேறில்லே. இங்கு யகாரம் உதாத்த ஸ்வரயுக்தமாயிருக்கையாலே வேஷ்டநம் ஓதப்பட்டு வருகிறது. இதே காண்டத்தில் மேலே ஆறும் ப்ரச்நத்தில் * ஜீ8ஸ்தஷெ்யவா நுவாகத்தில் (ரயெஹிஷூஹ வாஜயஞ:) என்றுள்ளது. இங்கு யகாரம் ஸ்வரித ஸ்வரயுக்தமாகையாலே ஏற்கெனவே நாம் காட்டியிருக்கிற நியமப்படிக்கு வேஷ்டநம் ஓதப்படுவதில்லே. இவ்விரண்டிடங்களிலும் ஸ்வாஹெ8த்திற்குச் சேர ஸுயஃஹெ8ம் இருந்தே தீரவேணும். இவ்விடங்களில் மட்டும் ஸாயணர் தமது பாஷ்யத்தில் அர்த்தபேதத்தைக் காட்டியிருக்கின்றர். முந்தின இடத்தில் "வாஜயஞா—வாஜஃஸஜா்த்ந ஊஹூனௌ" என்றர். பிந்தின விடத்தில் "ரயெஹிஷூஹ வாஜயஞ:—ரயெஷூஹ ஸீஷு௰ஹூஞ:" என்றர். இவை பொருத்தமான விவரணங்களே யாகும்.

முன்னே காட்டின முதல்காண்ட ஸ்தலங்களிலும் இப்படி வெவ்வேறு பொருளே விவரித்துக் காட்டவேண்டியிருந்தும் காட்டாதது ஏன்? என்று விமர்ஸிக்க ப்ராப்தமாகும்போது ஒரு மருமம் வெளியாகின்றது. (அதாவது) ஸாயணர் தாம் ஒருவரே வேதபாஷ்யமியற்றவில்லேயென்றும், விஜயநகரமஹாராஜ ஸந்நிதானத்தில் பலபல பண்டிதர்களே வரவழைத்து அவர்களுக்கெல்லாம் மாஸிகவேதனமேற்பாடு செய்வித்து, அவர்களுக்கு வேதத்தைப் பல பாகங்களாகப் பிரித்துக் கொடுத்து ஹாஷ்யங்களெழுதச் சொல்லி அவற்றை ஒன்று சேர்த்தாரென்றும் ப்ராவதாதியுள்ளது. அது இவற்றல் மெய்ப்பிக்கப்படுகின்றது. இப்போது நாம் எடுத்துக் காட்டின ரீதியில் இன்னமும் பலபல காட்டக் கூடியவை யிருக்கின்றன.

வடிவாடத்திற்கும் ஸ்வாஸந்நிவேஸத்திற்கும் பொருந்தாதபடி ஹாஷ்யம் செய்துள்ள ப்ரகாரங்களே இதுவரையில் காட்டினேம். ஔசித்யவிருத்தமாகவும் பாஷ்யம் செய்திருக்கிறபடியைச் சிறிது காட்டுவோமினி.

*உரவஃ ஆநொ உஹிஷஸூ8 ஃயமௌஷஃஸிநு ஹவெ வ–ர–ஹ௵த: வ–ர–க்ஷ–* என்றவிடத்தில் வ–ர–க்ஷ–வ8த்திற்கு ஸாயணஹாஷ்யம் காண்மின். * வ–ர–க்ஷ–— (வ–ர–ஷ–) ௵ஹ–ஷ–உதெ்ஷ– (க்ஷ–யதெ) ஸூயதெவு.திவாஃதஜ தீவ–ர–க்ஷ–:;

பர்ஹிஷ்டரே வ பர்ஹிஷ்ட, என்றார். எதுக்கு இந்த க்லிஷ்டவ்யத்யயம் கொள்ளவேணும்? பர்ஹிஷ்ட என்றவிது (ஸப்தமீ) என்ற நபும்ஸகபதத்திற்கு விசேஷணமேயன்றிப் பர்ஹிஸ்ஸப்தனுக்கு விசேஷணமன்று. இதை நன்கு தெரியச் சொல்லுகிறோம் கேண்மின். *தனூஷு ஸீவதே ஹவ்யம் பர்ஹிஷ்ட ஸ்வதா ஸ்வீத* என்றவிடத்தில் பர்ஹிஷ்ட பதத்தை ஸௌர்யஸ்ய விசேஷணமாக்கி இவர்தாமே உரைத்ததுபோல இங்கும் ஸப்தமீவிசேஷணமாக்கி யுரைப்பதே உற்றதாம். மனம்போனபடி காட்டும் வ்யத்யயங்களை வேதபுருஷன் ஸஹிக்கமாட்டான்.

இன்னமுங் கேண்மின்; *தைவ்யா ஹோதாரா வநிஷத* என்றவிடத்தில் தைவ்யௌ ஹோதாரௌ என்ற த்விவசநாந்தபதங்களே *ஸுபாம் ஸுலுக் பூர்வஸவர்ணா* த்யாதிஸூத்ரப்படி ஆகாராந்தமாக வந்திருப்பதால் அப்படி பொருளுரைக்கவேண்டியிருக்க, தைவ்யா:, ஹோதார: என்ற பஹுவசநாந்தபதங்களின் வ்யத்யயமாகக் கொண்டு பஹுவசநார்த்த முரைத்துவைத்தார். இப்படிப்பட்ட வ்யத்யயத்தை வேதபுருஷன் எங்கும் விவக்ஷித்ததேயில்லை. இந்த தைவ்யா, ஹோதாரா என்பவை வேதத்தில் அனேகமாக ஓதக் காண்கிறோம். எங்கு வந்தாலும் த்விவசநமே. *தைவ்யா ஹோதாரா ஊர்த்வமத்வரம் ந:* என்றவிடம்போன்ற பலவிடங்களில் தைவ்யாபதத்தைப் பாருங்கள். *ஹோதாரா ஜ்யோதி: ப்ரதிசா திசந்தா* என்றது போன்ற பலவிடங்களில் ஹோதாராபதத்தைப் பாருங்கள். ப்ராஹ்மணத்தில் ஸௌத்ராமணியில் இந்த பதங்களை விசேஷமாகக் காணலாம். அங்கெல்லாம் *வீதாமாஜ்யஸ்ய ஹோதர்யஜ* என்றே வந்து த்விவசநார்த்தத்தைக்காட்டும். ஆக *தைவ்யா ஹோதாரா* எங்கும் த்விவசநமே. ப்ரக்ருதமான *தைவ்யா ஹோதாரா வநிஷத* த்ரிவி தவைவ. அப்படியானால் *வநிஷத வசோ ந* என்ற மேற்பதங்கள் ஸஹிக்கமாட்டாவே என்று ஸஹஸா சொல்லிவிடவேண்டா; *தைவ்யா ஹோதாரா* என்பவை த்விதீயாத்விவசநாந்தமத்தனை, *ஹோதாயக்ஷத் தைவ்யா ஹோதாரா வநிஷதாஸ்விநா* இத்யாதாவிவ. உதாஹ்ருதம்,

இங்கே காட்டியவற்றிற்கு ப்ராமாணிகஸரணியில் மஹான்கள் ஸமாதானம்தெரிவித்தால் அந்த ஸமாதானத்தைக்கொண்டே இவைபோன்ற மற்ற விடங்களிலும் தெளிவு பெறலாமென்பது நமது ஆசை.

பட்டபாஸ்கரபாஷ்யத்திலும் இத்தகைய பிறழ்வுகள் காண்பதுண்டு. சிலவற்றை இங்கெடுத்துக்காட்டுவோம். மூன்றாவது காண்டத்தில் நாலாம் ப்ரச்நத்தின் முடிவான அநுவாகத்தில் "ப்ரஹ்மா தேவாநாம் பதவீ: கவீநாம்" என்னுமிடத்தில் பதவீ: என்பதற்கு பதவ்ய: என்று பஹுவசநார்த்தம் செய்தார். உடனே (யத்வா) என்றிட்டு ஏகவசநார்த்தமுமொன்று செய்தார். அவ்வளவோடு நில்லாமல் "அநவயாரணாத் அநவக்ரஹ:" என்றெழுதிவைத்தார். 'அர்த்த நிச்சயமில்லாமையாலே இதற்கு வேஷ்டநபாடமில்லை' என்பது இங்கே இவர் விவக்ஷித்த பொருள். இது பதபாடத்திற்குச் சிறிதும் பொருந்தாது. பதவீரிதி பத — வீ:, என்று உலகமெல்லாம் அவக்ரஹமோதாநிற்க, அநவக்ரஹ: என்றால் என்ன அர்த்தமிதற்கு?

க்ருஷ்ணயஜுஸ்ஸம்ஹிதாரூபம் ப்ரஸித்தமான பதபாடமுள்ள ஸம்ஹிதையின் பாஷ்யத்திலேயே இப்படிக் காட்டக்கூடிய வ்யாகாதங்களிருக்கும்போது பதபாடம் அடியோடு அவதரிக்கப்பெறாத வேதபாகங்களுக்கு எழுதப்படும் பாஷ்யம் எப்படியிருக்குமென்பதைப்பற்றி

நாம் என்ன நினைக்கமுடியும்? மூன்ருவது அஷ்டகத்தைச் சேர்ந்ததான காண்டத்தில் மூன்ருவது ஸூக்தத்தில் * ஸ்ருஐயாதெவொ தெவகஸ்மஸ்ரூதெ * என்கிற வாக்யம் ஸுப்ரஸித்தமானது. வேதமோதாதவர்களுங்கூடக் கையாளும் வாக்யமிது. இதற்குப் பதபாடமில்லாமையாலே அவரவர்கள் இஷ்டப்படி பதம் பிரித்துக் கொள்வதை ஆக்ஷேபிப்பார் யாருமில்லை. ஸ்ருஐயா, தெவஃ, தெவகஸ்மி, ஸுஸ்ரூதெ. என்று ஸாமாந்யர்கள் பதம் பிரித்துப் பொருள்கூறி வருகிருர்கள். உஹயஹாஷ்யகாரர்களும் இப்படியேதான் பதவிஹாகம் கொண்டு பாஷ்யமிட்டிருக்கிருர்கள்.

இங்கு நாம் உணர்த்துவதைச் சிறந்த வைதிகர்கள் மிகுந்த ஸவயாநத்துடன் விமர்சிக்கவேணும். வேதத்தில் ஸ்ருஐயா என்கிற பதமும் தெவஃ என்கிற பதமும் ஓரிடத்திலல்ல; பலவிடங்களில் ஓதப்பட்டு வருகின்றன. இவற்றின் ஸ்வரம் எங்கும் ஒரேவிதமாகத்தானுள்ளது. ஸ்ருஐயா என்கிறபதத்தில் (யா) என்கிற மூன்ருமக்ஷரமானது எங்கும் ஸ்வரிதமேயொழிய ஓரிடத்திலும் உதாத்தமன்று. இதை ஸம்ஹிதையிலும் பார்க்கலாம், ப்ராஹ்மணத்திலும் பார்க்கலாம். ஸூக்தமான * ஸ்ருஐயாதெவஃ * என்கிற வாக்யமுள்ள அநுவாகத்திற்கு அடுத்த அநுவாகத்திலேயே காணலாம். * ஸூஜாவதெஸ்ருஐயாவெஸ்ராஜஸி * உதாஹரணங்கள் பார்க்கலாம். இப்பதம் உதாத்தாந்தமாக நிற்பது எங்குமே கிடையாது. இதற்கடுத்த தெவஃ என்கிற பதத்தையுமெடுத்துக் கொள்வோம். இது வேதத்தில் இரண்டாயிரமிடங்களில் வருவது, எங்கும் முதலெழுத்து அநுதாத்தமாயும் இரண்டாமெழுத்து உதாத்தமாயுமே யிருக்கும். தெவொவஸ்விதா * உதாஹரணஸஹஸ்ரம்.

இப்படி நியதஸ்வரங்களான இவ்விரண்டு பதங்களையும் ஸூக்தஸ்தலத்தில் பாஷ்யகாரர்கள் விபரீதஸ்வரமாகக்கொண்டு அர்த்தம் செய்திருப்பது வேதபுருஷனுக்கு ஈஷத்தும் அபிமதமன்று. ஸ்ருஐயா, தெவஃ என்று பாஷ்யகாரர்கள் கொண்ட பதவிபாகம் தவறுதான். இங்கு ஸுதெவஃ என்பதே உண்மையான பதம். ஸ்வரிதாந்தமான ஸ்ருஐயாபதமும் உதாத்தாதியான ஸுதெவபதமும் ஸம்ஹிதமாம்போது இப்போது இங்கு ஸ்ருயமாணமான ஸ்வரஸந்திவேஷம் தன்னடையே வந்து நிற்கும். * தெவயஜ்யாயாஸுஷா * உதாஹரணங்கள் காணலாம். தெவஃ என்கிறபதம் அந்தோதாத்தமானலும் ஸுதெவஃ என்கிறபதம் ஆத்யுதாத்தமேயாகும். * தநெவஹூதம் நெவம்மாய் ஸுஹூதமென்பது ஸுத்யுதாத்தஹூதஃ * என்பதொன்றைக்காட்டினுல் போதுமிங்கு. ஹூதமென்பது அந்தோதாத்தமாயிருக்கிறதன்றே. வேதமோதினவர்களுக்கு இப்படி நூருயிரமிடங்கள் நினைவுக்கு வரும். ஆக ஸுதெவஃ ஸ்ருஐயாதெவகஸ்மஸ்ரூதெ. என்றுதான் பாஷ்யம்செய்யவேணும்.

வெதஹாஷ்ய ஹயெ ஹாஜஸம்ஸீதநாஃ
வைதிகா விதத்ஸ்ரஸார்ஸ்வஞ்ஜிதாஸ।
தெ ஞவஹ ஹூதெதம் வஸாஜஸ்ய நஃ
தகஸ்ஸ்தெராயயஞ்ஜிதவஸாவஜ்ஞிஃ॥

வேதபாஷ்ய விமர்சநம் முற்றிற்று.

---

# விளக்கொளியெம்பெருமானும் வேதாந்த தேசிகனும்.

ஸ்ரீராமாநுஜன் 140 லக்கமுள்ள சென்றமாதத்து இதழில் வெளியிடப்பட்டுள்ள உபந்யாஸவிம்சதியில் (பக்கம் 13ல்) ஏழாமுபந்யாஸத்தின் முடிவில் "தீபப்ரகாச ஸ்வாமியும் வேதாந்த தேசிகனும்" சேர்ந்த திருவுருவப்படம் வெளியிடப்பட்டிருப்பதை யாவரும் பார்த்திருக்கிறீர்கள். அதில் முக்கியமாக ஒருவார்த்தை வெளியிட்டிருக்கிறோம்; (அதாவது) "இந்த ப்ளாக்கு நம்முடைய தன்று; ஸேவா என்கிற வடகலைப்பத்திரிகையில் வெளியிடப்பட்டது" என்று.

"தேசிகனுடைய உண்மைஸ்வரூபம்" என்கிற மகுடத்தின்கீழ் நாம் அப்போது விரிவாக எழுதியுள்ள விஷயங்களையும் ஸஹ்ருதயர்கள் மீண்டுமொருமுறை வாசிக்கவேணும். விளக்கொளியெம்பெருமானும் வேதாந்ததேசிகனுமான அத்திருவுருவப்படம் எப்போது எடுக்கப்பட்டதென்றால், விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதியை வடகலையார் ஆக்ரமிக்க ஆபாஸமான முயற்சிகள் செய்துகொண்டிருந்த காலத்தில் எடுக்கப்பட்டது. அந்தத் திருவுருவப்படத்திலேயே இதற்குத்தக்க சான்று இருப்பதை யாவரும் கவனிக்கலாம். (அதாவதென்னவென்றால்,) தேசிகனுடைய திருநெற்றியில் விளங்குவதோ தென்கலைத் திருமண்காப்பு. திருவடிவாரத்தில் மாறுபாடு உள்ளதைக் கவனிக்கவேணும். அதன் மருமம் என்னவென்றால், அது திவ்யமங்கள விக்ரஹத்தில் ஈஷத்தும் ஸம்பந்தப்பட்டதன்று. தனியாகவொரு சிறுபலகையில் வடகலைத்திருமண்போட்டு அதை உருவப்படமெடுக்கும் சமயத்தில் திருவடி வாரத்தில் கொணர்ந்துவைத்தார்களென்றும், அது கவனிக்கப்படாமலே உருவப்படம் எடுக்கப்பட்டதென்றும் அதனால் மேலொருபடியும் கீழொருபடியுமாகக் காண்கிறதென்றும் இதை அவரவர்களே எளிதாகத் தெரிந்துகொள்ளமுடியும்.

இந்த வுருவப்படம் வெளிவந்ததைக்கண்ட நவீனர்கள் ஒரு விநோதம் செய்திருக்கின்றார்கள். அதாவதென்னவென்றால், தேவப்பெருமாள் ஸன்னிதியிலெழுந்தருளியுள்ள மதுரகவி நாதமுனி ஸமேதரான நம்மாழ்வாரை மூலத்திருமேனியுடனுங்கூட பட்டைபட்டையான வடகலை நாமத்தோடு ப்ளாக் செய்வித்து வெளியிட்டிருக்கிறார்கள். தலைமேல் வகுளாபாணப்பெருமாள் வைபவம் என்றும் கீழே சடகோபன் என்றுமிட்டு, தண்பொருநல்வருங் குருகேசன் என்று தொடங்கி அபத்தக்களஞ்சியமான வைபவச்சுருக்கமச்சிட்டு "மார்பிலே கைவைத்து உறங்கலாமென்று இருப்போமாக" என்று முடித்துபே. வ. கி..... பெயரால் வெளியிட்டிருக்கிறார்கள். இதனால் என்னகாட்டப்படுகின்றதென்றால், இந்த க்ருத்ரிமம் எப்படி சாதுர்யமாகச் செய்யப்பட்டிருக்கிறதோ இதேவிதமாகத்தான் விளக்கொளி தேசிகன் தென்கலைத்திருமண்காப்பு திகழ (க்ருத்ரிமமாக) ப்ளாக் செய்விக்கப்பட்டு வெளியிடப்பட்டிருப்பதாக உலகம் கொள்ளவேணுமென்று பிறரால் காட்டப்படுகிறது.

இங்கே ப்ராமாணிகர்கள் தெளியவேண்டியதாவது, க்ருத்ரிமங்கள் யதேஷ்டமாகச் செய்யமுடியுமென்பதை யாரும் மறுக்கமுடியாது. விளக்கொளி வேதாந்தவாசிரியருடைய படம் நாமெடுத்ததன்று, நாம்வெளியிட்டதன்று, ஸேவாபத்ரிகை வெளியிட்டதென்பதை யாவரும் தெரிந்துகொள்ள அந்த ஸேவாபத்ரிகையின் ராப்பர் அப்படியே ப்ளாக்கெடுத்து இதில் வெளியிடப்பட்டிருக்கிறது.

(P. T. O.)

இவ்வண்ணமாக நம்மாழ்வார் ப்ளாக்கு இவர்கள் வெளியிட்டிருப்பது ஒரு தென்கலைப் பத்திரிகையில் வெளிவந்திருந்தால் அதற்கும் ப்ராமாண்யம் ஏற்படக் குறையில்லை. இனி, இதில் காண்கிற ஸேவாபத்ரிகை ராப்பரின் ப்ளாக்கும் க்ருத்மந்தானென்கிற வாதம் கிளம்பவேண்டும். அதனையே எதிர்பார்த்திருக்கின்றது உலகம்.



# திருவேங்கடமுடையான் மஹோத்ஸவம்.

(ப்ர—அ.)

நிகழும் புரட்டாசித் திங்களில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் தொடங்கித் திருவோண நன்னாளில் அவபிரதமும் த்வஜாவரோஹணமுமாகப் பெற்ற திருவேங்கடமுடையான் மஹோத்ஸவத்தை ஒன்றிரண்டு நாள் உடனிருந்து அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. திருவேங்கடமுடையானுடைய ஐச்வரியமும் ஸாம்ராஜ்யமும் ஆண்டுதோறும் திங்கள் தோறும் (கிம் பஹுநா?) க்ஷணந்தோறும் அபிவிருத்தி பெற்று விளங்கு மதிசயத்தைப் பற்றி என் சொல்லுவது! 'நெஞ்சால் நினைப்பரிதால்' என்றும், 'வாசாமகோசரம்' என்றும், 'அவாங்மநஸ கோசரம்' என்றும் சில சொற்களுண்டே: அவற்றுக்கு ஸத்தியமாகவும் முக்கியமாகவும் இதுதான் இலக்கு என்னத் தட்டில்லை. திருவரங்கச் செல்வனாரான பெரிய பெருமாளுடைய விபூதி விஸ்தாரங்கள் அப்ரமேயங்களாய் ஈடு மெடுப்புமில்லாதவையாய் விளங்கா நிற்பது தனிப்பட்ட விஷயம். ப்ராகார கோபுரமண்டபங்களின் ஸம்ருத்திகளும் வீதி நதி விபவங்களும் திருநாட்டிலும் காணக் கிடைக்கமாட்டாதவையன்றோ. நம் ஆசார்ய ஸார்வபௌமர்களனைவரும் படுகாடு கிடந்த விடமென்னு மேற்றும் அநிதர ஸாதாரணமன்றோ அரங்கநகர்க்கு, அஃதிருக்க,

சிலவாண்டுகட்கு முன்பு லக்ஷாதிகாரியாயிருந்த திருவேங்கடமுடையான் இப்போது கோடீச்வரராக விளங்கா நின்றார். "தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்" என்று திருவரங்கம் பெரியகோயிலைப் பற்றியருளிச் செய்தது போலத் திருவேங்கடத்தைப் பற்றி ஒருவரும் பேசியிருக்கவில்லை. * கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம் * எப்பாடும் வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே * என்றும் * குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி மருளிசை பாடும் வேங்கடம் * என்றும் இப்புடைகளிலேதான் பேசியிருந்தார்கள். இப்போது பலவாண்டுகளாகவே தென்னாடும் வடநாடும் மட்டுமன்றிக்கே நாற்றிசையு மெண்டிசையும் நைமித்திகமாகவன்றியே நித்தியமாகவே வந்து தொழுதேத்தியிறைஞ்சு மதிசயம் எம்மனோருரைக்குந் தரமன்று.

"**कलौ वेङ्कटनायकः**— கலௌ வேங்கடநாயக:" என்கிற புராண வசனம் கலியுகம் தோன்றுவதற்கு முன்னமே தோன்றிய தென்று பெரியார் கூறுவர். தெலுங்கு பாஷையில் ஒரு பழமொழி வழங்குவதுண்டு "ஸங்கடமண்டே வெங்கடஸாமி" என்று. ஏதேனும் ஸங்கடம் யாருக்குத் தோன்றினாலும் வெங்கடஸாமி யென்று திருவேங்கடமுடையானை நினைத்தவாறே தொலைந்து போம் என்பது இதன் கருத்து. கலியுகத் தொடக்கத்தில் திருவவதரித்தவரான நம்மாழ்வார் தம்முடைய முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில் மேலே கூறிய பழமொழியை ஒரு பாட்டில் அற்புதமாக நினைப்பூட்டியுள்ளார்: அப்பாசுரத்தைச் சிறிது விவரிக்க விரும்புகிறோம்:

"உறுகின்ற கன்மங்கள் மேலன வோர்ப்பிலராய் * இவளைப்

பெறுகின்ற தாயர் மெய்ந்நொந்து பெறார் கொல்? துழாய் குழல் வாய்த்

துறுகின்றிலர் தொல் வேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்
இறுகின்றதாலிவளாகம் * மெல்லாவி யெரிகொள்ளவே.''

இப்பிரபந்தம் ச்ருங்கார தோரணியிலன்றோ பெரும்பாலும் செல்லுகின்றது. பராங்குச நாயகி பரமபுருஷன் விஷயமான வேட்கை நோய் கொண்டு மேனி மெலிந்து வடிவு வேறுபட, அது நோக்கிய தாய்மார் 'மாயப் போர்த் தேர்ப்பாகனுர்க்கு இவள் சிந்தை துழாய் திசைக்கின்றது; வானோர் தலைமகனும் சீராயின தெய்வ நன்னோயிது' என்று தெளியாமல் க்ஷுத்ர தெய்வத்தால் வந்த நோயென்று மாறாகக் கருதி விபரீதமான சில பரிஹார முறைகளைச் செய்விக்க, நோயொன்றும் மருந்தொன்றும்மாதலால் சிறிதும் ஏற்றிராத விதனை நோக்கிய தோழி அத் தாய்மார் செவிப்பட முன்னிலைப் படர்க்கையாகக் கூறிய பாசுரம் இது. இந்தத் தெய்வ நன்னோய்க்கு இருவகையான பரிஹார முணர்த்தப்படுகின்ற திங்கு:

[துழாய் குழல்வாய்த் துறுகின்றிலர்.] எம்பெருமானது திருத்துழாயைக் கொணர்ந்து முடியிலே சூட்டினால் தீரும்; அது செய்கின்றிலர்: [தொல்லை வேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்] 'இவள் நோய் தீர்ந்தால் திருவேங்கடமுடையானுக்கு இன்னது செய்கிறேன்' என்று ஒரு ப்ரார்த்தனை செய்துகொண்டு ஒரு மஞ்சள் சீலையை முடிந்து வைக்கலாமே. அதுவும் செய்கின்றிலர் என்பது இங்குப் பரமதாற்பரியம். ''வேங்கடம் ஆட்டவும்'' என்றதற்குப் பலவகையாகக் கருத்துரைக்கலாம். 'ஆட்டவும்' என்றது 'நீராட்டவும்' என்றபடியாய், திருமலையை இவள் தாபந் தீர்ப்பதற்கு உரியதொரு பொய்கையாக நினைத்துச் சொல்லுகிறதாகக் கொள்ளலாம்; அன்றி, இவள் நோய் தீர்ந்தால் இவளைத் திருவேங்கடமலைக்கு அழைத்து வருகிறேனென்று சொல்லிக் கொள்ளலாம்; அப்படியும் சொல்லிக் கொள்ளவில்லையே! என்றதாகவுமாம்.

ஆக, திருவேங்கடமுடையான் நோய்தீர்க்கும் பெருமாளென்பதும் ப்ரார்த்தனைகள் செய்து கொள்ளுதற்குரிய பெருமாளென்பதும் ஆழ்வார் திருவாக்கிலிருந்தே விளங்கிற்றென்பது உணர்க.

முக்கியமாக ஒரு விஷயம். ஆஸ்திகர்கள் மெலிந்து நாஸ்திகர்கள் மலிந்த காலமிது! என்று பெரும்பாலர் கொண்டிருக்கிறார்கள். இது மருளென்றே சொல்லலாம்படி திருவேங்கடமுடையான் பெருமை காண்கிறது. எண்ணிறந்த ஜனங்கள் திருமலையப்பன் ஸேவைக்கு நாடோறும் பின் மாலை நான்குமணியிலிருந்து இரவு பத்து மணி வரைக்கும் க்யூ லிஸ்டத்தில் நின்று படும்பாட்டைக் காணுமிடத்து, ஆழ்வார் * பொலிக பொலிக வில் ''அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல்'' என்றாப் போலே ஆஸுரப்ரக்ருதிகளைத் தடவிப் பிடிக்கவேண்டும் படியாகவன்றோ இருக்கிறது. பக்த ஜனங்கள் க்யூலிஸ்டத்தில் நிற்பதென்கிற விது நாளடைவில் திருமலையடிவாரத்திலிருந்தே ஏற்படுமோ! என்றும் நினைக்கவேண்டியதாகிறது.

இத்தகைய திருவேங்கடச் செல்வனுருடைய பெரு மேன்மைகளுக்குப் பல்லாண்டு பாடுவோம். ... ... ... ... ...



ஸ்ரீ:

# திருவேங்கடமுடையான் ஸேவையும் சித்ர கவித்வமும்.

நிகழும் புரட்டாசி மாதத்தில் திருமலையில் நடந்த திருவேங்கடமுடையானுத்ஸவத்தில் 26—9—1960 தேதியன்று பெரிய திருவடி மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருமலை விடைகொண்டிருந்தேன். அவ்விடத்தில் காசீப்ராந்தத்திலிருந்து ஒரு வித்வான் அடியேனுக்கு நெடுநாளைய நண்பர் வந்திருந்தார். அவரோடு வார்த்தையாடுகையில் அவர் ஒன்று விரும்பினார். (அதாவது) முத்ராலங்காரரீதியில் சித்ரகவித்வமாக உடனே ஒரு ச்லோகம் ஆசுகவித்வமாகவும் சொல்லவேணும்; ச்லோகம் திருவேங்கடமுடையானைத் துதிப்பதாக அமையவேணும், அதில் இன்றைய வருஷம் மாஸம் தேதி திதி வாரம் நக்ஷத்திரம் எல்லாம் ஸூசனையாக அமைந்திருக்கவேண்டும் என்றார். அப்போதே அவ்வண்ணமாகவே சார்தூலவிக்ரீடித விருத்தத்தில் ஒரு ச்லோகம் சொன்னேன். 1960-வது வருடம், (ஸெப்டம்பர் என்கிற) ஒன்பதாவது மாதம், 26 ஆம் தேதி, சார்வரி ௵ புரட்டாசி ௴ அநூராதா நக்ஷத்திரம் ஷஷ்டி திதி திங்கட்கிழமை ஆகிய அன்றைய வருஷ மாஸ தேதி திதி வார நக்ஷத்ரங்களெல்லாம் அமைய வைத்தும் திருவேங்கடமுடையானைத் துதித்தும் அந்த ச்லோகம் அமைக்கப்பட்டது. அது வருமாறு,

एकं ब्रह्म कलौ युगे नवनवोन्मेषोज्ज्वलं षड्गुणै-
राढ्यं शून्यसमाधिकं नवकवीन्द्रेड्यं च षड्विंशकम् ।
शार्वर्योपमवक्त्रमम्बुजलसत्कन्योरसं राधया
श्लिष्टं स्कन्दनुतं सुधांशुसुखदं श्रीवेङ्कटेशं भजे ॥

𑌏𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌲𑍌 𑌯𑍁𑌗𑍇 𑌨𑌵𑌨𑌵𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌂 𑌷𑌡𑍍𑌗𑍁𑌣𑍈-
𑌰𑌾𑌢𑍍𑌯𑌂 𑌶𑍂𑌨𑍍𑌯𑌸𑌮𑌾𑌧𑌿𑌕𑌂 𑌨𑌵𑌕𑌵𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑍇𑌡𑍍𑌯𑌂 𑌚 𑌷𑌡𑍍𑌵𑌿𑌂𑌶𑌕𑌮𑍍 ।
𑌶𑌾𑌰𑍍𑌵𑌰𑍍𑌯𑍋𑌪𑌮𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑌮𑍍𑌬𑍁𑌜𑌲𑌸𑌤𑍍𑌕𑌨𑍍𑌯𑍋𑌰𑌸𑌂 𑌰𑌾𑌧𑌯𑌾
𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌨𑍁𑌤𑌂 𑌸𑍁𑌧𑌾𑌂𑌶𑍁𑌸𑍁𑌖𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌂 𑌭𑌜𑍇 ॥

இதில் 1960-வது வருஷம் என்பதைக் காட்டும் முந்தின நான்கு விசேஷணங்கள். ஒன்பதாவது மாதம் என்பதைக் காட்டும் ஐந்தாவது விசேஷணம். இருபத்தாறுந்தேதி யென்பதைக் காட்டும் ஆறாவது விசேஷணம். ஆக, பூர்வார்த்தத்தினால் ஆங்கில வருஷ மாஸ தேதிகள் காட்டப்பட்டன. இனி உத்தரார்த்தத்திலுள்ள ஐந்து விசேஷணங்கள் சார்வரி வருடம் புரட்டாசி மாதம் அநுஷ 'நக்ஷத்திரம் ஷஷ்டி திதி திங்கட்கிழமை என்றிவ்வளவையும் காட்டும். ஆகப் பதினொரு விசேஷணங்களும் திருவேங்கடமுடையானுடைய ஸ்துதியாகவும் அமைக்கப்பட்டன. இதுதான் முத்ராலங்கார வகை.

* 𑌸𑍂𑌚𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍂𑌚𑌨𑌂 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌪𑌰𑍈𑌃 𑌪𑌦𑍈𑌃 *
என்பது சந்த்ராலோகத்திலுள்ள முத்ராலங்கார லக்ஷணம்.

இனி இந்த சுலோகம் விவரிக்கப்படுகிறது.

1. 𑌏𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌲𑍌 𑌯𑍁𑌗𑍇— ஏகம் ப்ரஹ்ம கலௌ யுகே.

"கலௌ வேங்கட நாயக:" என்கிறபடியே இக்கலியுகத்தில் அத்விதீய தைவமானவர் திருவேங்கடமுடையானென்கிறது. 1960 ஆம் வருஷமென்று காட்ட வேண்டினபடியால் அதில் முதல் லக்கமான (1) என்பது இதில் காட்டப்பட்டதாயிற்று.

2. 𑌨𑌵𑌨𑌵𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌮𑍍— நவநவோந்மேஷோஜ்வலம்.

இந்த விசேஷணத்தில் (9) என்கிற லக்கம் காட்டப்படுகிறது. "மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய், பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான் தன்னை" [பெரிய திருமொழி. 8—8—10] என்கிறபடியே தசாவதாரங்கள் செய்பவனான எம்பெருமான் கல்கி யவதாரத்தை பவிஷ்யத்தாக வைத்து இதுகாறும் ஒன்பது திருவவதாரங்களையே செய்திருப்பவனென்கிறது. (நவநவ) என்கிற இரட்டிப்பு — * எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே * என்னும்படியான அநுபவத்தைக் காட்டும். திருவேங்கடமுடையான் புதிது புதிதான திருக்கோலங்கள் கொண்டு ஸேவை ஸாதிக்கும்படி சொல்லிற்றாயிற்று.

3. 𑌷𑌡𑍍𑌗𑍁𑌣𑍈𑌰𑌾𑌢𑍍𑌯𑌮𑍍— ஷட்குணைராட்யம்.

1960ல் (6) என்கிற லக்கம் காட்டவேண்டி இந்த விசேஷணம் அமைந்தது. ஞானம் ஶக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்களுக்கு ஹமமென்று பெயர். இக்குணங்களை யுடையவர் ஹமவான். இச் சொல்லுக்குத் திருவேங்கடமுடையானே கொள்கலமென்றதாயிற்று.

4. 𑌶𑍂𑌨𑍍𑌯𑌸𑌮𑌾𑌧𑌿𑌕𑌮𑍍— ஶூந்யஸமாதிகம்.

1960ல் மூன்று லக்கங்கள் காட்டியாயிற்று. இனி நான்காவது லக்கம் பூஜ்யமென்று காட்டவேணும். அதற்கு சூந்யமென்றும் பெயராதலால் அச் சொல்லையிட்டு அது காட்டப்படுகிறது. * 𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌶𑍍𑌚 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 * என்கிற உபநிஷத்தின்படியும், * ஒத்தார்மிக்காரையிலையாய மாமாயா * என்கிற திருவாய்மொழியின்படியும் ஒத்தாரும் மிக்காருமில்லாதவன் திருவேங்கடமுடையானென்கை.

. 𑌸𑌮𑌶𑍍𑌚 𑌅𑌧𑌿𑌕𑌶𑍍𑌚 𑌸𑌮𑌾𑌧𑌿𑌕𑍌 ; 𑌶𑍂𑌨𑍍𑌯𑍌 𑌸𑌮𑌾𑌧𑌿𑌕𑍌 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍.
ஆக இந்நான்கு விசேஷணங்களினால் 1960 ஆம் வருஷமென்று காட்டிற்றாயிற்று,

5. நவகவீந்த்ரேட்யம்— நவகவீந்த்ரேட்யம்.

ஒன்பதாவது மாதமென்று ஸூசிப்பிக்கப்படுகிறது. ஆழ்வார்களொன்பதின்மராலே பாடப் பெற்றவரென்கை. ஸ்ரீரங்கநாதன் பதின்மர்பாடும் பெருமாளென்றும் திருவேங்கடமுடையான் ஒன்பதின்மர்பாடும் பெருமாளென்றும் ப்ரஸித்தியுள்ளது. "சோழியன் கெடுத்தான் காணும்" என்கிற பழமொழியின்படி தொண்டரடிப்பொடியாழ்வாரொருவர் பாடிற்றிலராதலால் நவபி: கவீந்த்ரை: ஈட்யராணுர் திருமலையப்பன்.

6. ஷட்விம்சகம்— ஷட்விம்சகம்.

(ஸெப்டம்பர் மீ) இருபத்தாருந்தேதியன்று என்பது ஸூசிப்பிக்கப்படுகிறது. * பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்காரமனங்களே * என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி அசேதந தத்துவங்கள் இருபத்துநான்காய், ஜீவாத்மா இருபத்தைந்தாவது தத்துவமாய், பரமபுருஷன் இருபத்தாருவது தத்துவமாயிருப்பனென்று நூற்கொள்கை. திருவாய்மொழியில் (1—10—2) * எண்ணிலும் வரும் * என்றவிடத்து ஈடு முப்பத்தாருயிரப்படியில்,

"சதுர்விம்சதி தத்வமாயிருக்கும் அசித்து: பஞ்சவிம்ஸகன் ஆத்மா; ஷட்விம்ஸகன் ஈச்வரன் ... ... ..."

என்றருளிச் செய்திருப்பதும் காண்க.

ஆக பூர்வார்த்தத்தால் ஆங்கில வருஷ மாஸ தேதிகள் தெரிவிக்கப்பட்டனவாயின.

இனி உத்தரார்த்தத்தினுல் வைதிகப்ரக்ரியையில் வருஷம் மாஸம் நக்ஷத்ரம் திதி கிழமை ஆகிய இவை தெரிவிக்கப்படுகின்றன.

1. ஸர்வர்யோபமவக்த்ரம்— சர்வர்யோபமவக்த்ரம்.

சார்வரி வருஷம் காட்டப்படுகிறதிங்கு. திருவேங்கடமுடையான் திங்கள் திருமுகத்தானென்பது பொருள். ஸர்வரீ என்று ராத்ரிக்குப் பெயர். ஸர்வர்யா: பதி:—ஸர்வர்ய: ; இரவுக்குத் தலைவனாகிய சந்திரனென்கை. அவனேடு உவமைகொண்ட திருமுகத்தையுடையவனென்கை.

2. அம்புஜஜலஸக்தகந்யோரஸம்— அம்புஜலஸக்தந்யோரஸம்.

கந்யாமாஸம் (புரட்டாசி மீ) காட்டப்படுகிறதிங்கு. அலர்மேல்மங்கையுறைமார்பனென்பது பொருள். அம்புஜே ஸக்தா கந்யா யஸ்ய உரஸி, தம்.

3. ராதயாச்லிஷ்டம்— ராதயாச்லிஷ்டம்.

அன்று அநூராதா நக்ஷத்திரமென்று காட்டப்படுகிறது. "ராதா விஸாகா" என்கிற அமரகோஸத்தின்படி ராதா என்று விசாகத்திற்குப் பெயராயினும் நாமைக தேஸ

க்ரஹணமாகக் கொள்க. அல்லது, ‘அநூராதா’ என்கிற பெயரானது விசாகத்தை யநுஸரித்ததென்று பொருள்படுவதனுல் இங்கு “ராதயாச்லிஷ்டம்” என்னுமளவும் அநூராதா நக்ஷத்ர ஸூசகமென்று கொள்வதில் குறையொன்றுமில்லை. ராதயா ச்லிஷ்டமென்றது விசாகத்தை யநுஸரித்ததென்றபடியால் அநூராதாவைக் காட்டிநிற்கும். எம்பெருமான் ராதையோடு கூடினவன் என்பது வாஸ்தவார்த்தம். ராதாரமணனென்றபடி.

4. 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌨𑍁𑌤𑌃— ஸ்கந்தநுதம்.

இன்று ஷஷ்டீ திதியென்று காட்டுகிறது. ஸ்கந்தன் ஷஷ்டீ தேவதை. “மருவிய மயிலினனறுமுகனிவனே” (திருப்பள்ளியெழுச்சி) என்கிறபடியே ஸுப்ரஹ்மண்யாதிகள் வந்து துதிக்க நின்றவன் திருமலையப்பனென்கை. *பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய* என்றும், *நோலாதாற்றேனுனபாதம் காணவென்னும் நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மானும் நிறை நான்முகனும்* என்றும் திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் தொழவருமவர்களைச் சொல்லுமிடங்களில் ஸ்கந்தனும் அவர்ஜநீயனேயன்றோ.

5. 𑌸𑍁𑌧𑌾𑌂𑌶𑍁𑌸𑍁𑌵𑌤𑌃— ஸுதாம்சுஸுகதம்.

அன்று திங்கட்கிழமை யென்று காட்டுகிறது இதனுல். ஸுதாம்சுவென்று சந்திரனுக்குப் பெயர். மதிகோள்விடுத்த தேவனென்பது வாஸ்தவார்த்தம். *தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து* என்றும் *மாமதிகோள் முன்னம்விடுத்த முகில் வண்ணன்* என்றும் ஆழ்வார்களருளிச் செய்வது காண்க. இங்கு 𑌸𑍁𑌧𑌾𑌂𑌶𑍁𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌂 சுக்லபக்ஷமென்பதையும் காட்டும்.

6. 𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌂 𑌭𑌜𑍇— ஸ்ரீ வேங்கடேசம் பஜே.

ஆகப் பதினொரு விசேஷணங்களினுல் அறிவிக்கப்படும் பெருமைகளையுடையனுன திருவேங்கடமுடையானைத் தொழுகின்றேனென்றதாயிற்று.

அன்பர்களே! இந்த ச்லோகத்தை அர்த்தவிவரணத்தோடுங்கூட அந்த காஶ்மீவித்வான் கேட்டுப் பரமானந்த மெய்தினுர். திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் இத்தகைய வாசாகைங்கர்யம் பண்ண ப்ராப்தமாயிற்றே யென்று அடியேனும் யஜமானனும் க்ருதார்த்தனுமானேன்.

॥ वेङ्कटेशः प्रसीदतु ॥

—•◦◦•—

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

# தேசிக ஹ்ருதயம்

[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

வேதக் கடல்கடைந்த வேதாந்த வாசிரியன்
போதக் கடலாய்ப் புனிதமாய்க்—கோதற்ற
தேன்மொழிகள் தந்தருளித் தீய பொருள்திரளைத்
தானுெழித்தான் தாளே சரண்.

## — முன்னுரை —

“ [illegible] —நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹு பிருபசிதம் யாமுநேய ப்ரபந்தைஸ் த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதமகிலதம: கர்சநம் தர்சநம் ந:” என்கிறபடியே, நம்மாழ்வார் திருவருளால் ஸகலார்த்த விசேஷங்களேயும் நிதிபெற்ருற் போலே பெற்றுவாழ்ந்த ஸ்ரீமந்நாதமுனிகள் அநுஸந்தித்துக்கொண்டிருந்த ஸத்ஸம்ப்ரதாயார்த் தங்களே மணக்கால்நம்பி வழியாக லபிக்கப்பெற்ற ஆளவந்தார் அவ்வர்த்த விசேஷங்களேத் தம் முடைய திவ்யகடாக்ஷ மூலமாகவும் பெரியநம்பி திருமலேநம்பி திருக்கோட்டியூர்நம்பி திருமாலே யாண்டான் முதலான ஸ்வசிஷ்யவர்க்க மூலமாகவும் எம்பெருமானுர் பக்கலிலே தேக்கியருள, அவை எம்பார் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளே முதலான ஆசாரியர்களின் வழியாக வும், திருக்குருகைப்பிரான்பிள்ளான் கிடாம்பியாச்சான் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்களின் வழியாகவும் ப்ரவஹித்து அஸ்மதாதி ஸம்ஸாரி சேதநஸமுஜ்ஜீவந ஸாதனங்களாய் விளங்கி வாரா நின்றன.

மேலே நிர்தேசித்த ஆசார்யவர்யர்கள் பேசிற்றே பேசும் ஏககண்டர்களாகையாலே இவர்களின் திவ்யஸூக்திகளிலே அர்த்தபேதம் காண்கைக்கு அவகாசமில்லே. ஸ்வல்ப யோஜனுபேதங் கண்டால் காணலாமத்தனே. இவ்வுண்மையை யுணராதார் சிலர், வேதாந்த

வாசிரியர் தனிப்பட்டிருந்து வேறுபட்ட கொள்கைகளைக் கொண்டிருந்தாரென்றும் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலானோர் கொண்டிருந்த கொள்கைகளை அசாஸ்த்ரீயங்க ளென்று கண்டித்துவிட்டாரென்றும் சொல்லிப்போருவது ஆதாரமற்றதென்பதையும் நவீனர்கள் ஆதரித்துவருகிற அர்த்தங்களுக்கும் ஆசரித்துப் போருகிற அனுஷ்டானங்களுக் கும் வேதாந்ததேசிக க்ரந்தங்களில் ஆதாரமில்லையென்பதையும் ஸாரமாகவும் ஸம்க்ஷேபமாக வும் உபபாதிப்போமிதில். .... .... .... முன்னுரை முற்றும்.

உபய ஸம்ப்ரதாயத்திலுமுள்ள முக்கியமான ஒருவாசி.

தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? வடகலை ஸம்ப்ர தாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? என்று பலர் தெரிந்துகொள்ள விரும்புகிறார் கள். அவற்றை இன்னவை யின்னவையென்று அடுத்தபடியாகத் தெரிவிப்போம். அதற்கு முன்னே ஸாரமாக வொன்று தெரிவிக்கிறோம். நற்கதி பெறவேணுமென்கிற நசை இரு கலையார்க்கும் துல்யமாயிருக்கச் செய்தேயும், நாம் பேறு பெறுவதற்கு முக்கிய ஸாதனம் பகவத் ப்ரவ்ருத்தியே யல்லது ஸ்வப்ரவ்ருத்தியன்று என்பது தென்னாசாரியர்களின் கொள்கை. நம்முடைய ஸ்வப்ரவ்ருத்தியினால்தான் நாம் பேறு பெற முடியுமென்பது மற்றை யோர்களின் கொள்கை. இதுதான் இரு கலையார்க்கும் தலையான பேதமென்று ஸாரமாகக் கொள்ளக்கடவது. மற்றைப்படியான பேதங்களாவன ;—

| தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்கள். | வடகலை ஸம்ப்ரதாயார்த்தங்கள். |
|---|---|
| 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகம். | 1. பகவத் க்ருபை ஸஹேதுகம். |
| 2. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்குப் பேறு | 2. ஈச்வரனைப்பெறுவதுசேதநனுக்குப் பேறு |
| 3. பரகத ஸ்வீகாரமே நன்று | 3. ஸ்வகதஸ்வீகாரமேதான் உள்ளது |
| 4. ப்ரபத்தி அநுபாயம் | 4. ப்ரபத்தி உபாயம் |
| 5. பிராட்டிக்குப் புருஷகாரத்வமாத்ரமே யுள்ளது; உபாயத்வமில்லை. | 5. பிராட்டிக்கு புருஷகாரத்வத்தோடு மோக்ஷப்ரதத்வமுமுண்டு |
| 6. பிராட்டிக்கு அணுத்வமேயுள்ளது | 6. பிராட்டிக்கு விபுத்வமே யுள்ளது |
| 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமில்லை | 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமுண்டு |
| 8. தயை என்பது பரதுःகதுःகித்வம் | 8. தயை பரதுःகநிராசிகீர்ஷா ரூபம் |
| 9. வாத்ஸல்யம் தோஷபோக்யதா ரூபம் | 9. வாத்ஸல்யம் தோஷாதர்சித்வ ரூபம் |
| 10. ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம் | 10. விஹிதவிஷய ப்ரவ்ருத்தி அவர்ஜநீயதா கையாலே தத்த்யஜநம் அநாவச்யம் |
| 11. எம்பெருமானுடைய வ்யாப்தி பரிஸமாப்ய வர்த்தநம் | 11. எம்பெருமானுக்கு பரிஸமாப்ய வர்த்தநம் கிடையாது |
| 12. ஜாதி நசிக்கும் | 12. ஜாதி நசிக்கமாட்டாது |
| 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தம் | 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூபாநுரூபமே |
| 14. கைவல்ய மோக்ஷம் புநராவ்ருத்தி யற்றது | 14. கைவல்ய மோக்ஷத்திற்குப் புநராவ்ருத்தியுண்டு |
| 15. நமஸ்காரத்தில் ஸக்ருதாவ்ருத்திபோதும் | 15. அஸக்ருந் நமஸ்காரம் வேண்டும் |
| 16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானமென்று தனியே யில்லை | 16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானம் தனிப்பட ஆவச்யகம் |

தாய் விடத்தகுந்ததேயாகுமென்பது ஸதாசார்ய ஸித்தாந்தம். சாஸ்த்ரங்களில் ஸ்வதார போகம் நியமமாக விதிக்கப்பட்டு அது தவிர்ந்தால் தோஷமும் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கை யாலே விஹிதவிஷய நிவ்ருத்தி அசாஸ்த்ரீய மென்பர் நவீனர். ஸ்ரீவசநபூஷணத்தில் இரண்டு மூன்றிடங்களில் உத்தமாதிகாரிக்கு விஹிதவிஷய நிவ்ருத்தியைத் தன்னேற்றமாக அருளிச் செய்கிறார். மிகுஞானச் சிறுகுழவியான எம்பெருமான் சோதிவாய் திறந்து பணித்த கீதையில் (8-3) எட்டாவது அத்யாயத்தில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்ய காரர் வெளியிட்டருளினதும் தாத்பர்ய சந்திரிகையில் தேசிகனால் விவரிக்கப்பட்டதுமான விசேஷார்த்தமிது. இதனை விவரிப்போமிங்கு:—

கீழ் ஏழாவது அத்யாயத்தின் முடிவில் கண்ணபிரான் * ஜராமரண மோக்ஷாய * என் கிற இருபத்தொன்பதாம் ச்லோகத்தில் * தே ப்ரஹ்ம தத் விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்மசாகி லம் * என்று ஒரு வார்த்தை சொன்னான். அதுகேட்ட அர்ஜுனன் அந்த வார்த்தைக்கு உண்மையான பொருளைத் தெரிந்துகொள்ளவேண்டிக் கண்ணனையே கேள்வி கேட்கிறான் எட்டாவது அத்யாயத்தின் 1, 2-ச்லோகங்களினால் * கிம் தத் ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம * என்று தொடங்கிக் கேள்விகள் உள்ளன. மூன்றாவது ச்லோகம் தொடங்கிக் கண்ணனுடைய விடை வெளிவருகின்றது. கிம் கர்ம என்ற கேள்விக்குக் கண்ணனுடைய விடை * பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித:* என்பது. இங்கு விஷயமென்ன வென்றால், கேண்மின்.

சிலவற்றை அறியவேண்டும் என்று பகவான் நியமித்துவருகையில் கருமத்தை அறிய வேண்டும் என்று சொல்லியிருந்ததனால் கருமமென்றால் எது? என்று அர்ஜுனன் கேட்க நேர்ந்தது. அதற்கு பகவான் விடை கூறியுள்ளார். ஒருவன் ஒன்றை யறிவதானது, பற்று வதற்காகவும் ஆகலாம். விடுவதற்காகவும் ஆகலாம். நல்லதாயிருந்தால் பற்றுவது. கெட் டதாயிருந்தால் விடுவது. ஆகவே நல்லதையும் தெரிந்துகொள்ளவேண்டும் கெட்டதையும் தெரிந்துகொள்ளவேண்டும். இங்கே தெரிந்துகொள்ளவேண்டியதாகக் கூறப்பட்ட கருமம் நல்லதன்று, கெட்டது—என்பதாக பகவானுடைய விடையினால் தெரிகின்றது. பூதபாவோத் பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித: * என்பதற்கு நம்முடைய ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய் திருக்கிற அர்த்தம் வருமாறு:—

> "ஹூதஹாவঃ—உநுஷ்யாதிஹாவঃ; தது்வகரொ பொவிஸமঃ * வணுஷ்யா ஊஹநுதாவাவঃ வுஷவசஹெர ஹவதி தி ஸ்ருதிவிஜொ பொஷிதூாவஙஜঃ ஸ கஉவஸஜ்ஞிதঃ. தஹாவிஷம் ஸாநுபஙம் உஜெஜநீயதயா வரிஹரணீயதயாச உஷ்க்ஷுஹிঃ ஜூாதவூ். வரிஹரணீயதாச நுஜநஜெவ வக்ஷ்யதெ * யதிஜொ ஹுஹசயஞம் அரஹதி."

என்பது கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி. இதன் கருத்தாவது—ஸ்த்ரீ புருஷஸம்யோக மென்பது தான் இங்கே கருமமென்கிறது. இது மிகவும் அருவருக்கத்தக்கதாகையால் விடத்தக்கதாக இதனை யறியவேண்டும். இதை விடவேண்டுமென்பது மேலே பதினோராவது சுலோகத்தி லும் காட்டப்படுகிறது என்பதாம். இதனால் நாம் தெரிந்துகொள்வது, க்ருஹஸ்தாச்ரம தருமமாக விஹிதவிஷயபோகம் ப்ராப்தமேயானாலும் அது விசிஷ்டாதிகாரிக்கு ஜுகுப்ஸ நீயமேயென்று. ஆகவே இவ்விஷயத்திலும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம் நிரவத்யமென் றுணர்க. மேலேகாட்டிய கீதாபாஷ்யத்திற்கு தாத்பர்ய சந்த்ரிகையை நன்கு ஸேவிப்பது (10)

## 11. எம்பெருமானுடைய வ்யாப்தி பரிஸமாப்ய வர்த்தநம்

உபநிஷத்தானது *அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:* என்று ஸகல பதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாக ஓதியிருக்கின்றது. அணுவான பதார்த்தங்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்கமாட்டாதென்று ஒருவாதம். அவயவியான பதார்த்தங்களுக்கே உள் வெளி என்று சொல்லக்கூடுமாதலாலும் நிரவயவமான அணு பதார்த்தங்களுக்கு 'உள்ளே வெளியே' என்று சொல்வதற்கு ப்ரஸக்தியில்லாமையாலும் அணுபதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளுற வ்யாப்தி சொல்லவொண்ணுது என்கிறார்கள் பிறர். அன்றியும், ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்ய வர்த்தித்வம் [அதாவது - பரிபூர்ண வ்யாப்தி] கொள்ளவொண்ணுது. ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் [அதாவது பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாபித்து வர்த்திக்கிறதென்னில்] மற்றொரு பதார்த்தத்தில் வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கீகரிக்க லாகாதென்றும் மற்றொரு வாதம் கூறுவர் பிறர்.

அணுபதார்த்தங்களிலும் அந்தர் வ்யாப்தி உண்டென்றும், ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்யவர்த்தித்வமும் பொருந்துமென்றும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம். சாரீரக மீமாம்ஸையில் (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) * க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வஶப்தகோபோ வா * என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தின்மேல் * ஶ்ருதேஸ்து ஶப்தமூலத்வாத் * என்கிற ஸித்தாந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. சாஸ்த்ரங்களினால் தேறுகின்ற விஷயங்களில் குதர்க்க மூலமான குசோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்று இந்த ஸூத்ரம் சிக்ஷிக்கின்றது. * அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித: * என்று சுருதி ஸ்பஷ்டமாகச் சொல்லி வைத்தது. வேதஞ் சொன்னது ஒருபுறமிருக்கட்டும். வேதார்த்த நிர்ணயகர்களான வேதாந்த தேஶிக ப்ரப்ருதிகள் நிஸ்ஸந்தேஹமாக அருளிச் செய்திருப்பது என்ன? என்று பார்ப்போம்.

ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1–1–10) * பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * என்கிற பாசுரத்தின் ஆறுயிரப்படியில் இங்ஙனே யருளிச் செய்கிறார்:—"அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனாய்" என்று. தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப் படியென்று ஸம்ஸ்க்ருத ப்ரதிபதார்த்தடீகை பணித்துள்ளார். [அச்சிட்டு மிருக்கிறது.] அதில் இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் அவர் பணித்திருப்பதாவது—* ஸர்வேஷு ஸூக்ஷ்மேஷு ஸ்தூலேஷு ச ஸ்திதிர் வ்யக்திஷு ஜாதிவத் பரிஸமாப்ய வ்ருத்தி: * என்று. இதன் பொருளாவது, வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்யவர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜலபரமா

ணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்திலிருப்பதுபோல (நெருக்குண்ணுமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு * பர்யாப்த வ்ருத்தி: * என்று இம்மஹான் பணித்திருப்பது பூருவர்களின் ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். பரிஸமாப்ய வர்த்தமாநத்வமே சொல்லிற்று. ரங்கராமாநுஜஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியென்றால் அது தேசிக ஸூக்தியோடொப்ப ஆதரணீயமன்றோ. நேராக தேசிக ஸூக்தியையே காட்டுவோம். ந்யாயஸித்தாஞ்ஜந—ஈச்வர பரிச்சேதத்தில் இவ்வாக்ஷேபத்தை யெடுத்துக்காட்டி * ஶ்ருதேஸ்து ஶப்த உபபத்தேஶ்ச * என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே தஞ்சமாகக்கொண்டு * யதாஶாஸ்த்ரம் ஸர்வத்ர ஸம்பூர்ண ஏவ பகவாந் * [ஶாஸ்த்ரம் சொன்னபடி எம்பெருமான் எங்கும் பூர்ணனே] என்று தலைக்கட்டியருளினார். இதில் சிலர்க்கு உள்ள மருளைப் போக்குவோமிங்கு.

இந்த ஸித்தாஞ்ஜனத்தில் "அதஶ்சைஷ ஸர்வத்ர ஸ்தித: பரிபூர்ண ஏவ" என்றருளிச்செய்துவிட்டு, உடனே "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் நஸ்யாதிதி சேத்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி? என்பதொன்றையே விவேகிகள் விமர்சிக்கவேணும். * ஸர்வத்ராபி பூர்ண ஏவ * என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கின்ற ஈச்வரன் ஒரேயிடத்தில் எப்படி பூர்ணனுயிருக்கமுடியும்?" என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதே, கீழ் வாக்யத்திலிருந்துதானே இந்த ஆக்ஷேபம் தோன்றவேண்டும். இப்படி ஆக்ஷேபிக்கவேண்டும்படியான விஷயமே கீழ்வாக்கியத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறதென்பது கைகொள் கனியாகக் காண்கிறதே. இதை இல்லைசெய்ய யாரால் முடியும். சாகுந்தல நாடகத்தின் முடிவில் மஹாகவி ஒரு வாக்விநோதம் காட்டியுள்ளார்; அதைச் சுருக்கமாக நினைப்பூட்டுகிறோம்; குழந்தையான துஷ்யந்தகுமாரனெதிரில் ஒருத்தி ஒரு பதுமைப்பறவையைக்கொண்டு காட்டி "ஸர்வதமந! சகுந்தலாவண்யம் பச்ய" [குழந்தாய்! இந்த பக்ஷியின் அழகைப்பார்] என்று சொன்னவளவிலே 'அப்படியா? என் தாயான சகுந்தலையா? எங்கே?' என்றதாம் அக்குழந்தை. சகுந்தமென்ற பக்ஷிக்குப் பெயராகையாலே 'சகுந்தத்தினுடைய லாவண்யத்தைப்பார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையானது (சகுந்தலா...) என்று தன் தாயின் பெயரை ப்ரஸ்தாவித்ததாகக் கொண்டு சகுந்தலை எங்கே? என்று கேட்டதாக அமைப்பு உள்ளது. இங்கு 'சகுந்தலாவண்யம்' என்று சொல்லாமல் "விஹங்கம லாவண்யம்" என்றோ 'பக்ஷிலாவண்யம்' என்றோ சொல்லியிருந்தால் அப்போது குழந்தை 'என் தாய் எங்கே? என்று கேட்பதற்கு ப்ரஸக்தியுண்டோ? இது கவி தானாக வைத்தவொரு சமத்காரம். அப்படி ஏதேனும் இங்கு விசித்ரவாக்கின் அமைப்பு உள்ளதோ? ருஜுவான வாக்கேயுள்ளது. "ஸர்வத்ராபி பூர்ண ஏவ" என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?" என்று ஶங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்து கிடந்ததென்பது அசைக்கமுடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது. கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தையிட்டுமுடிக்காமல் * "யதாஶாஸ்த்ரம் ஸர்வத்ர ஸம்பூர்ண ஏவ பகவாந்" * என்று முதல் முதலெடுத்த பூர்ண சப்தத்தையேயிட்டு முடித்தார். இவ்விடத்தில் * க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதிபூர்வபக்ஷஸூத்ரத்தையும் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் தஞ்சமாகக் கொண்டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப் பட்டது. பிறர் சொல்லுகிறபடி ஸ்வாமிக்குத் திருவுள்ளமாயிருந்தால் இங்கு இந்த ஸூத்ரத்தை உதாஹரித்தது ஸர்வாத்மநா அப்ரஸக்தமாகுமே. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரமபுருஷனிடத்

திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்? என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அது தானே இங்கு ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாததொன்றில்லை யென்று சொல்லித் தலைக்கட்டினராயிற்று. இவ்விஷயத்தை நாம் ஸஹஸ்ரவ்யாப்திவரிஷ்யா என்கிற க்ரந்தத்திலும் ஸித்தாந்தஸௌபாக்யத்வீதிய கண்டத்திலும் வெகு விரிவாக உபபாதித்திருக்கிறோம். ஸத்ஸம் ப்ரதாயார்த்த ஸாரநிதியில் தமிழிலேயே மிக விரிவாக விளக்கியிருக்கிறோம். ... (11)

## 12. ஜாதி நசிக்கும்

* தக்கஉ யந்நலாய ஷாவிசூா யா வி உக்தயெ! ஞயாஸாயாவஜ கஉ விசூாநூா ஶிலவெநெவணடி ! * என்கிற ப்ரமாணம் ஸர்வஸம்ப்ரதிபந்நம். மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத் தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே தர்க்க பாண் டித்யத்தைக் கொண்டே பெருமைபாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

ஜாதியினால் ஏற்றமும், ஆச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தி னால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ்செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது தெளி வாயிற்று. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீ வசநபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப் பேசியுள்ளன. இவ்வர்த்த விஷயமான விவாதம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ மௌர விப்பதோ தகாது என்னுமபிஸந்தியினால் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்கள் வளர்ந்திருக் கின்றன. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தா லும் அவர்கள் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். நாமும் பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித் தம். ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதிவைத்தது எதற் காகவென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக்காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும். இக் காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் * க்வசித் க்வசித் * என்றபடியே ஒரோ விடங்களிலே தோன்றுகை அஸம்பாவிதமன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதி பத்தி குன்றாமேயிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ் கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்று தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது.

அவ்விஷயம் யாதெனில்; ஜாதி ஞமஉாவாயியே பொழிய நசிக்காமலிருக்கக் கூடிய தன்று. இதை தேசிகன் ஈஹயவூஊந ஸாரத்தில் * நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது * என்று தொடங்கும் சுலோகத்தில் * ஷாயீஶவெஹாக்ஷணக வித ஶாவாயயவயூ உஷ தாஉஜஊ தவூஶஉநவஉாஂஹொஜாஜவெ * என்பதனாலும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் * ஶிஙொஷெஃஸ்ரீக்வாதிஃ * என்பதனாலும் விளக்கியருளினர். ஸ்த்ரீஜாதிபோய் ஶிஙாஜாதி ஏற்பட்டது முதலில்; பின்னை அந்த ஶிஙாஜாதி போய் ஸ்த்ரீஜாதி ஏற்பட்டது. ஆகவே ஜாதி ஆமமாபாயியென்று தேசிகன் திருவுள்ளமாக முடிந்தது. .... ... (12)

## 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தம்.

ப்ரபத்தியொழிந்த மற்றையுபாயங்கள் உபாயாந்தரங்களெனப்படும். உபாஸநம் முதலானவற்றிலே ப்ரபந்நர்களான நமக்கு ப்ராப்தியில்லை யென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்த உபாயாந்தரங்களை நாம் விடுகைக்கு ஹேது என்ன? என்கிற விசாரத்திலே, அவ்வுபாயாந்தரங்களை அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கு மீடான ஜ்ஞான ஶக்திகளில்லாமையே ஹேதுவென்று நினைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஜ்ஞாந ஶக்திகள் நம்போல்வார்க்கு இல்லையாகிலும் ஜ்ஞாநஶக்தி புஷ்கலர்கள் [பூர்வாசார்ய ப்ரப்ருதிகள்] பலருண்டே; அவர்கள் அநுஷ்டித்ததுண்டோ? அநுஷ்டிக்கத்தகுமோ? என்னில்; தகாது. உபாயாந்தரபரித்யாகத்திற்கு ஜ்ஞான ஶக்திகளில்லாமையே ஹேதுவன்று; எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்திரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னு மதுவே முக்க்யஹேதுவென்று ஸதாசார்யஸித்தாந்தம். அஜ்ஞானமும் அஶக்தியுபடியாக விடுவதானல் ஜ்ஞானஶக்திகளுண்டாகில் அவற்றைப் பரிக்ரஹிக்கவேண்டி வருமன்றே; ஸ்வரூபவிரோதியென்று விட்டாலன்றே மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூபவிருத்தமென்னுமதுவே ப்ரயாநஹேது.

இதை ஸ்வாமி தேசிகன் நியாஸதிலகத்திலே வெகு சாதுர்யமாகக் காட்டியருளினார்; எங்ஙனே என்னில்; அதுதன்னிலுள்ள சுலோகமிது;—

> "ஆர்த்தேஷ்வாஶுப²லா தத³ன்யவிஷயேऽப்யுச்சி²ன்னதே³ஹாந்தரா
> வஹ்ந்யாதே³ரநபேக்ஷணாத் தநுப்⁴ருதாம் ஸத்யாதி³வத்³வ்யாபிநீ ।
> ஶ்ரீரங்கே³ஶ்வர யாவதா³த்மநியத த்வத்பாரதந்த்ர்யோசிதா
> ஸைவ ஸத்³வாயயீரவிஹிதஸேவாத்யஹாவாஜ்ஞஸ்து தே ॥"

என்பது.

இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்களத்தனையும் பக்திவ்யாவர்த்தகங்கள். விவரித்துக் காட்டுகிறோம் காண்மின்; [ஆர்த்தேஷு ஆசுபலா] பக்தியானது விளம்பித்துப் பலனளிக்கும்; ப்ரபத்தி அங்ஙனன்றிக்கே விரைவில் பலனளிக்கும் — ஆர்த்தப்ரபந்நர்திறத்தில். [ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா] பக்தியானது தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தருவதில் நியதியுடையதன்று; ப்ரபத்தி நியமேந தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தீரும். [வஹ்ந்யாதே: அநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ] பக்தியாகிற உபாயத்தின் அநுஷ்டானத்தில் அக்நிகார்யம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாலே அது அதிக்ருதாதிகாரமாயிருக்கும். ப்ரபத்தியில் அவ்வபேக்ஷையில்லாமையாலே ஸத்யம் சொல்வதற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ அப்படியே ப்ரபத்தியிலும் ஸர்வரும் அதிகாரிகள். இனி இதற்கு அடுத்த விசேஷணமே ப்ரக்ருத விஷயத்திற்கு உற்று நோக்கத்தக்கது. [யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா] பக்தி ஸ்வரூபவிருத்தம். ப்ரபத்தி ஸ்வரூபாநுரூபம் என்கிறது. யாவதாத்மநியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு ப்ரபத்தி உசிதமாயிருக்குமென்றபோதே ப்ரபத்திப்ரதிகோடியான பக்தியானது அந்த பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாயிருக்குமென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றே; ஆகவே தேசிகன் திருவுள்ளமும் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே யென்று தேறி நின்றது, இதனையே

* பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல் * என்ற அடைக்கலப்பத்துச் செய்யுளும் காட்டிநின்றது. அவற்றில் பதி ஏன் கூடவில்லை? என்று கேட்கவேணும்.

"உபாயாந்தரங்களை ஸ்வரூப விருத்தமென்ன வொண்ணாது. இவை * அகிஞ்சநோநந்ய கதி: * என்றிருக்கும் அதிகாரிக்கு ஸ்வாதிகார விருத்தங்களென்ன ப்ராப்தம்" என்றும் தேசிகன் ரஹஸ்யத்தில் பேசியிருப்பதுண்டு. ந்யாஸதிலகத்தி லருளிச்செய்தபடியே இவை அத்யந்தபாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்குப் போராதென்கிற ஸத்ஸம்ப்ரதாய நிஷ்கர்ஷம் சாலவினிது.

## 14. கைவல்ய மோக்ஷத்தைப்பற்றி

கைவல்யமாவது ஸ்வாத்மாநுபவம். இதற்கொரு ஸ்தான விசேஷமுண்டு. அதுவும் மீட்சியில்லாத மோக்ஷமே யென்பது நம் ஆசார்யர்களின் ஸித்தாந்தம். இதை மோக்ஷமென்பது ஔபசாரிகமென்றும், மீட்சியுண்டென்றும் கூறுவர் பிறர். இவ் விவாதம் பூருவர்களின் காலத்தில் விசேஷமாக வளரவில்லை. பிற்காலத்தவர்கள் இதைப்பற்றி வெகு விரிவான க்ரந்த கோலாஹலங்களை வளர விட்டார்கள். ஸ்தோத்ரரத்நத்தில் நான்காம் ச்லோகத்தில் * [போகாபவர்க்க ததுபாயகதீ:] * என்ற விடத்துக்கு வியாக்கியானஞ் செய்யுங்கால் பெரியவாச்சான் பிள்ளைக்கும் தேசிகனுக்கும் அபிப்ராயபேதம் விளைந்திருப்பதுண்டு. கைவல்யாநுபவமென்னும் ஆத்மாநுபவத்தை அபவர்க்க பதத்திற்கு அர்த்தமாக வுரைத்தருளினர் பெரிய வாச்சான்பிள்ளை; முந்தின போக பதத்திற்கே அது அர்த்தமென்றார் தேசிகன்.

நியாய ஸித்தாஞ்ஜநத்திலே தேசிகன் இது விஷயமாகச் சில சொல்லிக்கொண்டு போம்போது ஸ்ரீ பாஷ்யஸூக்திகள் ஸ்வமதாநுகூலங்களென்றும் கீதாபாஷ்ய ஸூக்திகள் மாத்திரம் தம் கருத்துக்கு இணங்கவில்லை யென்றும் திருவுள்ளம்பற்றி * "[illegible]" என்ற ஒருவாக்யத்தினால் கீதாபாஷ்யஸூக்திகளுக்கு அஸ்வாரஸ்யம் கல்பித்தருளினர். ஸ்ரீபாஷ்யஸூக்திகளையும் கீதாபாஷ்ய ஸூக்திகளையும் ஸமரஸமாக நிர்வஹிக்க இயலாமையாலே அந்யதரக்ரந்தத்திற்கு அஸ்வாரஸ்ய கல்பநம் அவர்ஜநீயம் என்று தேசிகனுடைய திருவுள்ளமாயிருந்தது. ஒன்றுக்கும் அஸ்வாரஸ்யம் கல்பிக்கவேண்டாமல் எல்லாம் நன்குபொருந்தும்படியைப்பெரியார் நிரூபிக்கிறார்கள்.

கீதாபாஷ்யத்தில் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனான கேவலனுக்கு ப்ரஹ்மாத்மக ப்ரக்ருதி வியுக்த ஆத்மஸ்வரூப உபாஸநத்தையும் ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபாவாப்திரூபபலத்தையும் அர்ச்சிராதி கதியினால் பரமபத ப்ராப்தியையும் புநராவ்ருத்தியில்லாமையையும் அருளிச் செய்துள்ளார்; ஸ்ரீ பாஷ்யத்தில் * [illegible] * என்ற ஸூத்ர விவரணத்தில்— "[illegible]" என்றருளிச்செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலன் ஸ்ரீ பாஷ்யத்தில் சொல்லிற்றாகத் தேறுகின்றது. ஆகவே, ஆத்மஸ்வரூபாவாப்தியைப் பலனாகச் சொல்லுகிற கீதாபாஷ்யத்திற்கும், ப்ரஹ்ம ப்ராப்தியைப் பலனாகச் சொல்லுகிற ஸ்ரீ பாஷ்யத்திற்கும் பரஸ்பரவிரோதம் இருப்பதாகத் தோற்றும்.

இந்த விரோதத்தை விலக்கமுயன்ற தேசிகன் மதுவித்யாந்யாயத்தை மனத்திலே கொண்டு ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதான பலனாகவும் கல்பித்து நிர்வஹித்தருளினார். இப்படி நிர்வஹிக்குமளவில் கீதாபாஷ்ய ஸூக்தியில் அஸ்வாரஸ்யம் ஏறுகின்றது. அவ்வளவேயல்ல; அவாந்தர பலனைக் கல்பிக்க வல்ல ப்ரமாணமும் துர்லபமாகின்றது. மதுவித்யாந்யாயம் இங்கே ஸுதராம் அப்ராஸக்தம். ஒரு விரோதமும் வாராதபடி நிர்வஹிக்கும் வழி ஏதென்னில்;

ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன்; கீதாபாஷ்யத்திலருளிச் செய்தவிதுவே ஸித்தாந்தம். ஆனால் ஸ்ரீ பாஷ்யத்தில் * ப்ரஹ்மப்ராப்த்யபாவேந ஸாவதி ச்ரவணாத் * என்று ப்ரஹ்ம ப்ராப்தியை ப்ரதிபாதித்திருப்பது விரோதிக்கின்றதே யென்கிற சங்கை நிற்கின்றது. கேண்மின், விரோதமில்லை. அங்கு அடுத்தபடியாகவே "ஏதவத் தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதிவியுக்தத்வ ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம்" என்றருளிச் செய்திருக்கையாலே தத்க்ரதுந்யாயத்தைக் காட்டினதற்கேற்ப ப்ரஹ்மாத்மகஸ்வாத்மப்ராப்திதான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு ஏற்றதான பலனாகத் தேறும். ஆகவே விசேஷணதயா ப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வம் தேறுகையாலே ப்ரஹ்ம ப்ராப்தி சொன்னது பொருந்தும். ப்ரதானமாயிருக்கவேண்டிய ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாய் ஆத்மாநுபவமே ப்ரதானமாய்நிற்கையாலே கைவல்ய மோக்ஷம் இழிவுற்றது.

இப்படி நிர்வஹிக்கில் ஸர்வம் ஸமஞ்ஜஸமாகிறது. இப்படியல்லாமல் ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தர பலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை முக்கிய பலனாகவும் கல்பிப்பது நிராதாரமென்னுமளவே யல்ல, கீதாபாஷ்யஸூக்திக்கு அஸ்வாரஸ்ய கல்பகமாகவும் முடிகின்றது. பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு மூர்த்தந்ய நாடியினால் நிஷ்க்ரமணமும் அவாந்தர பலனாகிற வொரு வ்யவதானமின்றிக்கே பலனைப்பெறுவதென்கிற விஷயமும் ச்ருதப்ரகாசிகையில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

ஆகவே கீதாபாஷ்யத்தில் அருளிச் செய்தபடி ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபாவாப்திரூபமான பலனே கேவலனுக்கு நியதமாகவுள்ளது. அதுதானும் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநஸித்தமான பலனாகையாலே விசேஷணதயாப்ரஹ்மப்ராப்தியுமுள்ளதாகையாலே ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலனை யருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யமும் அவிருத்தமாகிறதென்று கொள்க. இதில் ஸாரமாகத் தெரிவிக்கவேண்டியது இவ்வளவே. கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் அஸ்வாரஸ்ய மிருப்பதாகவும் அதை ஸஹித்துக்கொள்ள வேண்டியதேயென்றும் தேசிகன் ஸ்பஷ்டமாக ஸாதித்திருக்கிறாரென்பது அபலபிக்க முடியாமலுள்ளது. அப்படிப்பட்ட அஸ்வாரஸ்யம் கிடையவே கிடையாதென்கிற நிர்வாஹ ஸரணியும் காட்டப்பட்டது. இவ் விஷயத்தில் இது போதுமென்று நிற்கிறோம். .... ... .... (14)

## 15. ஸக்ருத்ப்ரணாமத்தைப்பற்றி

ஸத் ஸம்ப்ரதாயத்தில் ஒரு தடவை நமஸ்கரிப்ப தென்றுள்ளது. 'பலமுறை நமஸ்காரம் செய்வதனால் ப்ரத்யவாயமுண்டோ? நமஸ்காரம் என்பது நல்ல காரியமேயொழிய

கெட்ட காரியமன்றே. பகவத் பாகவத விஷயங்களில் ஒரு தடவைக்குப் பல தடவையாக நமஸ்கரிப்பதனால் ஸ்வரூபம் நிறம்பெறுமே யல்லது கெட்டுப்போய்விடாதே. ஆகவே ஒரு தடவையே நமஸ்கரிக்க வேணுமென்று ஒரு நிபந்தனை கொள்ளவேண்டுமோ? பல தடவை நமஸ்கரிக்கக் கூடாதென்று சாஸ்த்ரம் மறுக்குமோ? அப்படி சாஸ்த்ரம் மறுத்திருப்பதாகவும் தெரியவில்லையே. தேஹத்தில் சக்தியற்றவர்கள் ஒரு தடவையோ அரை தடவையோ நமஸ்கரிக்கட்டும்; சக்தியும் உத்ஸாஹமுமுள்ளவர்கள் பலமுறை நமஸ்கரித்தால் அதைக் குற்றமாகக் கொள்ளும்படி ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கத்தகுமோ?' என்றிங்ஙனே சங்கைகள் தோன்றக்கூடியவையுள. இதில் நம்மாசாரியர்களின் திருவுள்ளத்தை விளங்கவுரைக்கிறோம் கேண்மின். எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்களின் போக்கு உச்சாவசமாயிருக்கும். "மறைப் பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து" என்னுமா போலே நூற்கடல்களை நன்கு கடைந்து நுண்பொருள்களைக் கடைப்பிடித்துப் பரமாசாரியர்கள் காட்டியருளின அனுஷ்டானமே பரம சாஸ்த்ரம். ஸக்ருத் ப்ரணாம விஷயத்தில் என்ன நுண்பொருள் காணலாகும்? என்னில்; கேண்மின். நமஸ்காரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்பதை முந்துற முன்னம் விமர்ஶிப்போம். * நஜுர நஜுவஷூஹாவொயம நவூயொஜநவ-வெ-உகஃ। நீசெ ஆஜுயொஃ வ ஹாவொயம நஜுர நஜுவஷூ தாதூகஃ ॥ * என்று அஹிர்ப்புத்ந்யஸம்ஹிதையிலுள்ள வசனத்தை தேசிகனும் எடுத்துக் காட்டியுள்ளார். பெரியாரைக் கண்டால் சிறியார், தங்களுடைய சிறுமைக்கும் எதிர்த்தலையின் பெருமைக்கும் ப்ரதர்சகமாக நமஸ்காரம் செய்யவேணுமென்றது. வேறொரு ப்ரயோஜநமும் இதற்கில்லையென்றும் சொல்லிற்று. ஒருகால் தொழுதமாத்திரத்தினால் ஸ்வநிகர்ஷமும் பரோத்கர்ஷமும் வூஉஸி-ஊதமாயிற்று. பலகால் தொழவேணுமென்கிற நிர்ப்பந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை.

சாஸ்த்ரங்களில், ஒற்றைக்கையால் நமஸ்கரிப்பது அபசாரம், ஒரு வூதக்ஷிணம் பண்ணுகை அபசாரம் என்று சொல்லியிருப்பதுபோல ஒரு முறை நமஸ்கரிப்பது அபசாரம் என்று சொல்லப்படவில்லை. "ஸகெநவாணிநா யஷூ-வூணஉெகு வ-ஹ-ஷொதூழ। நஷூ யஷூஷஷ் கஷஜெஊஃ" என்றும், "ஸகஹஷூவூணாஉஷூ ஸகம்அாவிவூஉக்ஷிணழ" என்றும் இத்தகைய ப்ரமாணங்களையே ஸ்தோத்ர பாஷ்யாதிகளில் உதாஹரிக்கக் காண்கிறோம்.

எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "வூணஉஷ் உதூாயொதூாய வ-நஃ வ-நஃ வூணஉஷ்" [தொழுது எழுந்தெழுந்து மீண்டும் மீண்டும் தொழுது] என்றருளிச் செய்திருக்கும் விஷயத்தில் தெளிவு பிறப்பிக்கிறோம். இங்கு "ப்ரணம்ய உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றது ஓரிடத்திலேயே இருந்துகொண்டு பலமுறை நமஸ்கரிப்பதைச் சொல்லுவதன்று. அந்த வாக்யத்திற்கு முன்னே "உ-ஸாஷெவ" என்றருளிச்செய்திருப்பதனால், எம்பெருமானைக் கிட்டுமளவும் காலால் நடந்து செல்லாமல் தெண்டனிட்டுக்கொண்டே வழியைக் கடந்து ஸ்ரீமந்நாராயணனை அணுகுவதாகவே அங்குப் பொருள்படும். இக்காலத்தில் இந் நிலத்தில் அஸக்ருத் ப்ரணாமகர்த்தாக்கள் செய்வது போன்ற செயல் அங்கு விவக்ஷிதமன்று. தெண்டன் ஸமர்ப்பித்துக்கொண்டே போய் வழியைக்கடந்து எம்பெருமானைக் கிட்டினபிறகு அங்கு ஒரேதடவை நமஸ்கரிப்பதென்னுமது அவ்விடத்திலேயே அடுத்தபடியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. "யாஅஉாநஃ வூணஉஷ் ஸூதூாநம ஹமவதெ நிவெஉயெகு" என்று அந்த வாக்யஸமாப்தியுள்ளது காண்க. இங்ஙனல்லாமல் ஓரிடத்திலேயே நின்றுகொண்டு பலமுறை தொழுவதைத்தான் "உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்கிற வாக்

கியம் சொல்லுகிறதென்று கொண்டாலும் குறையொன்றுமில்லை. "ந சாஸ்த்ரம் நைவ க்ரம:" என்கிற ரீதியிலே நூல்வரம்புக்கு அடங்காத அவ்விபூதியிலே நிகழுமது கொண்டு என்ன ஸாதிக்கலாகும்? இந்நிலத்தில் நம்பூருவாசாரியர்களின் அநுஷ்டானம் ஸக்ருத் ப்ர ணாமமே யென்பதை அந்த எம்பெருமானர் தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளபடிபாரீர். அவ்வாசிரியர் திருவாராதனக்ரம மருளிச் செய்கிற நித்யக்ரந்தத்தில்—"ஞாாய நாஹிஉ-வெ: ஹவெதி உ௰௵உஞ்ெ ண ஹ்ாய்ஷ் உ௰௵உஞ்ெ ண உணவகவூணஉ உதூாய ஷாமதம நிவெஉ யாவஷாாய நவஊாவு ஷாஙியூயா அ நஂக-ய-ாக." என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தமிறே. இது கொண்டு ஸ்ரீ வைகுண்டகத்ய ஸ்ரீஸூக்தியின் பொருளை நாம் விவரித்தபடியே தெளிய ப்ராப்தம்.

ஸ்தோத்ர ரத்நத்தில் இருபத்தோராம் ச்லோகத்தில் 'நமோ நம: நமோ நம:' என்று பலகால் அருளிச் செய்திருப்பதை ஸமந்வயப்படுத்தத் திருவுள்ளம் பற்றிய தேசிகன் அவ்விடத்து (ஸ்தோத்ர)ஹாஷ்யத்தில், *ஹுஶஂஸாயாஂ ஹுதிஜூாயாஂ ஹுறாவெதஜ-ஏநவிஅ। ஹயெஅ விஜயெஜெவ வெளநஃ வ-நூஉ௵ஂகுரதிஃ ॥ * என்கிற வொரு ச்லோகத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். இந்த ச்லோகத்தின் பொருளை விவேகிகள் விமர்சிக்கவேண்டும். ஸ்தோத்ரம் செய்தல், ப்ரதிஜ்ஞை செய்தல், அழுதல் வெருட்டுதல், அச்சந்தோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒருசொல்லையே அடுத்தடுத்துச் சொல்வதானது ஒருவகையான அலங்காரமாகும் என்பது இந்த ச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்ருகக் காண்கிறோம். 'பாம்பு பாம்பு பாம்பு' என்று பலமுறை சொன்னாலும் உள்ளது ஒரு பாம்பேயல்லது பலபாம்புகள் வந்துவிடமாட்டா. * பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறுயிரம் * என்று நூறுயிரந்தடவை சொன்னாலும் 'விஜயீபவ' என்று ஒருகால் சொல்வதற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தமேயன்றோ தேறுவது. அப்படியே * நமோ நம: * தொழுது தொழுது தொழுது * என்று எத்தனை பரியாயம் சொன்னாலும் அது ஸபா ஷங்காரமத்தனையென்று தேசிகன் நிர்ணயித்தருளினாராயிற்று. ஊஹகு நஉஷாாா-நுஷா நம் தேசிகனிடத்தில் இருந்திருக்குமாகில் இங்ஙனே யெழுதியிருப்பரா வென்பதை ப்ராமாணிகர்கள் விமர்சிப்பது. ... ... ... .... ... (15)

## 16. அத்ருஷ்டார்த்தமென்னும் சரணாகதியனுஷ்டானத்தைப்பற்றி.

பரமபுருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஸதாசார்யரை ஆச்ரயிக்கிறோம்; என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயணமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்துவருகிறது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்ராங்கனத்தையே ஸமாச்ரயணமென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயணமென்பது அவ்வளவேயன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானையடிபணிதல்" என்னும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசார்யனால் பெறுவிக்கப்படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது. ஆசார்யனால் க்ருதக்ருத்யனாகச் செய்விக்கப் பெறுகையே ஸமாச்ரயணமெனப்படுகிறது. பகவதாச்ரயணத்தில் பர்யவஸிதமாகிறது. இந்த ஸமாச்ரயணத்

தையே பஞ்ச ஸம்ஸ்காரமென்கிற சொல்லாலும் வழங்கிவருகிருர்கள். "தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோகமானது பஞ்ச ஸம்ஸ்காரங்கள் இன்னின்னவை யென்பதை விவரித்துக் காட்டுகின்றது. தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்தசக்ராங்கனமென்பது. திருவிலச்சினை யென்பது ஸம்ப்ரதாயவழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்காரமாவது த்வாதசோர்த்வபுண்ட்ர தாரணம் செய்வித்தல். மூன்ருவதான நாமஸம்ஸ்காரமாவது 'இந்த சிஷ்யன் ஸ்ரீவைஷ்ணவனுயினுன்' என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம். அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜதாஸனென்றும் மதுரகவிதாஸனென்றும் ஸ்ரீவைஷ்ணவதாஸனென்றும் இப்புடைகளிலே வழங்கிவருவன காண்க. இனி நான்காவதான மந்த்ர ஸம்ஸ்காரமாவது—திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது 'யஜ—தேவபூஜாயாம்' என்கிற தாதுவிலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிறதாகையாலே பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்ருெரு வகையாகவும் பொருள் கூறுவர். அது நிற்க.

இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனுன சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனுக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனுலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தி யென்றுணர்க. இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத்திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து சிலாலிகிதமாக்கிவைத்தவர் வேதாந்த தேசிகன். எங்ஙனே யென்னில்; ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்திலே—

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களை யெல்லாம் க்ஷமித்துத் திர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ளவல்ல ஸர்வசேஷியான ச்ரிய:பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனுயிருகென்கை. இது*மாசுச:*என்கிற சரண்ய வாக்யத்திலும் தீர்ந்தபொருள்."

என்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப்பொருளை யுணர்த்துகின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில். "த்வயோச்சரணநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை. மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வயமென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின்சொல்லுவதுண்டே இதுதான் ப்ரபத்த்யநுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேருென்று கிடையாதென்றும் ஸுவ்யக்தமாக அருளிச் செய்தாராயிற்று.

இங்ஙனே தமிழில் அருளிச்செய்ததை ஸாரஹம்ஸ்த்திமஹாஸூத்ரத்தின் முடிவில் ஸம்ஸ்க்ருதத்திலுமருளிச்செய்துள்ளனர்; இவை பலகால் எடுத்துக்காட்டப்பட்டவை.

இப்படியிருக்க, நவீனர்கள் அத்ருஷ்டார்த்தமென்று ஒன்று நடத்திப்போருவதானது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டாந பரம்பரையிலும் எங்கும் அத்ருஷ்டமான அர்த்தமாதலால் அத்ருஷ்டார்த்த மென்று இதற்குப் பெயரிட்டது மிகவும் பொருத்தமானதே. எம்பெருமானுருடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்தவர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணுகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும். அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனையல்லது மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குல கூடஸ்தரான எம்பெருமானுர்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து விசேஷித்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் தேசிகனே ந்யாஸதிலகத்தில் "ச்ருத்வா வரம் தத்நுபந்த மதாவலிப்தே" என்

பதனுல் நன்கருளிச் செய்துள்ளார். அந்த திவ்யக்ரந்தத்தில் * அந்தோநந்தக்ரஹண * என்றும் * உக்த்யா தநஞ்ஜய * என்றுமுள்ள இரண்டு ச்லோகரத்னங்கள் நிதியானவை.

> அந்யோந்யக்ரஹணவசதோ யாதி ரங்கேச யத்வத்
> பங்குர் நௌகாகுஹரநிஹிதோ நீயதே நாவிகேந,
> புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ் யார்ப்பகாதி:
> த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகோ மே தயாலு:''

இந்த ச்லோகத்தில் ஜ்ஞாநஹீநனை ஒருவன் குருடனுடைய ஸ்தானத்திலும், ஆசாரஹீநனை வொருவன் நொண்டியினுடைய ஸ்தானத்திலும் கொள்ளப்படவேண்டி தாகத் தேறும். இப்படிப்பட்ட அதிகாரிகள் ஞானமனுட்டானமிவை நன்ருகவேயுடை னை குருவையடைந்தே புருஷார்த்தஸித்தி பெறவேண்டுமென்றதாயிற்று.

இதற்குமேல் மூன்ருவதானவொருத்ருஷ்டாந்தம் (மூன்ருவது பாதத்தில்) வெ அற்புதமாகக் காட்டப்பட்டிருக்கிறது. *புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய ஸு காதி:* என்கிற த்ருஷ்டாந்தம் மிக அற்புதமானது. ராஜஸேவை பண்ணின அமாத்யனுடை ஸந்ததியார்கள் பலனையநுபவிக்கும்போது அந்த ராஜாவின் முகத்தைப்பார்த்திருக்கவேண் டியதில்லையன்ருே; அந்த ராஜாவைப்பற்றி ஒன்றுமே தெரிந்துகொண்டிருக்கவேண்டியதி லையே. 'தாம் அமாத்யனுடைய ஸந்ததியே' என்னுமிடத்தை மூதலிக்கவேண்டியதொன் தவிர வேருெரு க்ருத்யமும் இல்லையன்ருே ஸந்ததியார்க்கு; இதுதான் 'அவிதிதந்ருப:' என்கி விசேஷணத்தினுல் தெரிவிக்கப்படுகிறது. இதுபோலவே, அமாத்ய ஸ்தாநீயரான எம்பெ மானுருடைய ஸந்ததியான நாமும். 'நாம் எம்பெருமானுரைச் சேர்ந்தவர்கள்' என்பதை மூதலிப்பது தவிர பேற்றின்ஸித்திக்காகப் பெருமாளுடைய திருமுகத்தையும் காணவேண் டிய ஆவச்யகதையில்லையென்று ஸ்பஷ்டமாகத் தெரிவித்ததாகிறது.

நம்முடைய பூர்வாசார்யர்களின் சரிதைகளில் திருவிலச்சினைக்கு மேற்பட்ட வொ அத்ருஷ்டார்த்தானுஷ்டானமென்பது எங்குங்காணக்கிடைக்காதது. இவர்கள் புதிதாக கொண்டாடத் தொடங்கிய இந்த நடத்தையொன்றே இவர்களின் நவீநத்வத்தை நன்கு நி நாட்டித் தருமென்று கொள்ளக் குறையில்லை. ... ...; (.... 16

## — உபஸம்ஹாரம் —

நிகழும் சார்வரி வருடத்துப் புரட்டாசி மஹோத்ஸவத்தின் நீடுழி ஞாபக சின்னமா தேசிகஹ்ருதயமென்னுமிந்நூல் உண்மையான தேசிக பக்தர்களுக்கு * ஓவாதவூணுக உண் கொடுக்கப்பட்டது. ஸ்வாமி யதிராஜ ஸப்ததியில் * சுநவாயவிஷ்ணுவத ஸம்ஸ்ரயம் ஹஜெ என்கிற சுலோகத்தில் யதிராஜனை விலக்ஷண சந்திரனுகப் பேசுமடைவிலே * கஶுயா கயாவ கஶுயாவஜ்நாஜ்ஞிதழ * என்று ஒரு கலையும் குறையாத சந்திரனென்ருர். அந்த யதிரா சந்திரனைப்போலவே நம் நிகமாந்த ஸூரி நிஸாகரனும் நித்யம் ஷோடசகலா பரிபூர்த் குன்றப் பெருமைபற்றிப் பதினுறு கலைகளின் ஸ்தானத்திலே பதினுறு சிறந்த விஷயங்க இங்குக் கொள்ளப்பட்டு அவற்றில் அம்மஹாசார்யனுடைய யதாவஸ்திதமான திருவுள்ள ஸப்ரமாணமாக நிரூபிக்கப்பட்டது. ஆக்ரஹாதிகளாலே ஆரோபித்துச் சொல்லு யென்பது அணுவளவுமின்றிக்கே உள்ளது உள்ளபடியே உரைக்கப் பட்டுளதென்ப உணர்விலுயர்ந்தோர் எளிதினுணர்வர். ... .... ...

> ஶ்லோ॥ கவிதாகிஉககெஸரீஸுக்திததீ:விஶ்வாஸதம் விஶ்வஸநு ஹ்ருஉயெ।
> வாவாதிஹயம்கரஸூரிகஷ்டொஉவணஷ ஜநஸ்ஸ்ரீதாயஉ ஜஹ்॥
> ஹூஉரணிகீஂவஜதிஉஷ்ஸ்ருஜஜொ யெகெதீஉந்யாயஸ்வெஊாவிஷாணி।
> யஉ்ஷுஉயெஷு:ஸுஹவஉஷுக்ஷீணொவஉாநெஸ்வவதாஂஸிஉஉாழ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
தேசிகஹ்ருதயம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உபந்யாஸவிம்சதி—முன்தொடர்ச்சி

## ஒன்பதாவது உபந்யாஸம்—லோகாபிராமம்

உத்தேசித்த இருபது உபங்யாஸங்களில் எட்டு உபங்யாஸங்கள்மட்டுமே முன்னிதழில் வெளியிடப்பட்டன. ஒன்பதாவது முதல் இப்போது வெளியிட ஆரம்பமாகிறது. பல மஹான்களின் ஸ்ரீமுகங்களைப்பற்றியும் மற்றுஞ் சில செய்கைகளைப்பற்றியும் தெரிவிக்கின்ற இந்த வியாஸத்தையும் ஒரு உபங்யாஸ மாகவே இடுகிறேன். அடியேன் வெளியிடுகிற ஸம்ஸ்க்ருத—த்ராவிட—ஆந்த்ர—ஹிந்தீபுஸ்தக-பத்ரிகைகளை வாசிப்பவர்கள் நாற்றிசையிலும் மலிந்துள்ளார்கள். அவரவர்கள் அவற்றை வாசித்துவிட்டு வாளாவிருப்பதில்லை; தம்தம் மனத்தில் தோன்றும் உவப்பையும் வியப்பையும் அப்போதைக்கப்போது லிகித மூலமாகவும் நேர்முகமாகவும் தெரிவித்துக்கொண்டே யிருப்பர்கள். அங்ஙனம் தெரிவிக்கின்ற வ்யக்தி விசேஷங்களையும் தெரிவிக்கும் விஷயங்களையும் பிரசுரப் படுத்தவேண்டியது அவசியமாயினும், அவரவர்களின் அநுமதி பெறுமல் தெரிவிப்பது உசிதமன்றென்று ஸமயவிசேஷ ப்ரதீக்ஷையுடன் நிற்கின்றேனிப்போது. ஒருவர் தப்பாமல் யாவரும் தெரிவிப்பது ஒன்றுண்டு; (அதாவது) "எதிர்த் தலையில் வெளிவந்திருப்பதாகத் தெரிவிக்கப்படுகிற புத்தகம் எதுவும் எங்களுடைய பார்வைக்குக் கிடைப்பதில்லை. ஆனாலும், அவை கிடைக்கவில்லையே யென்று குறைபடுவதற்கு அவகாசமே யில்லாதபடி [D. R. ஸ்வாமி தெரிவித்திருக்கிற விதமாக] விஷயங்கள் தேங்கா யுடைத்தாற்போல் விளங்குவதால் எதிர் நூலின் அசட்டு வாதங்களும் விளங்கியே தீருகின்றன. பரிகணிதர்களாயிருப்பவர்களுக்கும் இத்தகைய துஷ்ப்ரவ்ருத்தி ஏதுக்கென்று சில ஸமயங்களில் நினைக்கிறோம். அதுவும் உலக நன்மைக்காகவேயென்று ஸமாதானமும் கொள்ளுகின்றோம்"—என்று இதை வாசகபேதங்களால் எழுதாதவர்களே கிடையாது. இங்ஙனம் உவப்பையே காட்டித் திருமுகங்கள் விடுக்கின்றார்கள்.

உவப்பைத் தெரிவிப்பவர்கள் பலர் இருப்பதுபோல் வெறுப்பைத் தெரிவிப்பவர்களும் இருப்பர்களன்றோ! என்று சிலர் நினைக்கவும் கேட்கவுங்கூடும். நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் விளக்கு முதலிய ஸ்ப்ருஹணீய வஸ்துக்களையுங்கூட வெறுப்பவர்கள் உலகில் இல்லாமற்போகவில்லையே; அப்படி நமது பத்ரிகைகளையும் நூல்களையும் வெறுப்பாருமிருக்கவே யிருப்பர். ஆனால் வெறுப்பை நமக்குத் தெரிவிக்க முன்வருவாராருமிலர். விஷயங்கள் ஒரு வகுப்பினர்க்கு (அல்லது) சில வ்யக்திகளுக்கு மிக்க வருத்தத்தைத் தருமவையெனினும் அவர்களும் உகப்பையே தெரிவிக்கின்றார்கள். அதற்குக் காரணம் விஷயங்களில் லவலேசமும் மறுப்புரைக்க முடியாமலிருப்பதேயாம்.

ஸ்ரீராமாநுஜன் 140 நெ. ஸஞ்சிகை முழுதும் ஞானச்சுடர்விளக்கென்று விபரீதலக்ஷணையாகப் பெயர்பெற்ற அஜ்ஞான விளக்குக்குக்கண்டனமென்பதை அறியாதாரில்லை. அதமபக்ஷம் 500 ரூ. செலவு செய்து அந்த நிந்தைச் சுவடியை எழுதியவர்களும் வெளியிட்டவர்களும் இன்னாரென்பதை வெட்டவெளிச்சமாக ருஜுப்படுத்தியாயிற்று. "அடித்தால்கூட அழத்தெரியாது" என்று சில ஜடங்களைப்பற்றிச் சொல்லுவது வழக்கம். அப்படிப்பட்ட நபர்களில் முன்னம்

எண்ணக்கூடிய ஒரு அவ்யபதேச்ய வ்யக்தியை முன்னிறுத்திச் சிலர் மறை
திருந்து விஷமங்கள் செய்துவருகிறார்களென்பதை உலகம் முழுவதுமுணர்
திருக்கின்றது. இதனால், இந்தப் பிரதிபக்ஷிகள் தெரிவிக்கும் விஷயங்களி
நேர்மையென்பது சிறிதும் கிடையாதென்று ஸ்பஷ்டமாக விளங்கிற்று. விஷ
மிருந்தால் வித்வான்களும் விவேகிகளும் தங்களை மறைத்திடாமல், தங்களுடை
உருவப்படங்களையும் வெளியிட்டுக்கொண்டு நேர்மை குன்றாமல் 'இதற்கு இ
பதில், இதற்கு இது பதில்' என்று கண்ணாடிபோல் காட்டமாட்டார்களோ
அதற்கு ஈஷத்தும் சரக்கில்லாமையால் மிகவும் நிஹீனமானவழிகளில் நுழைந்
அஸுரராக்ஷஸ க்ருத்யங்களைச் செய்து த்ருப்திபெறப் பார்க்கிறார்கள். சதுர்
தோபாயத்தை நிறைவேற்றுவதுதான் சதிரான ப்ரதிக்ரியை யென்று அதி
துணிந்தார்கள். இது, ஸமீபத்தில் ஜகத்ப்ரஸித்தமானதால் விரிவுவேண்டா.

அதனிலும் நிஹீனமான மற்றொரு காரியமும் செய்தார்கள், செய்கின்
கள். (அதாவது) ஊர்பேர் ஒன்றுமில்லாமல் கடூரமான ஆசார்ய நிந்தைகளை
செய்து லெத்தோ என்கிற அச்சிலேற்றிச் சில காகிதங்களை நூற்றுக்கணக்கா
பேர்களுக்கு (8 நயா பைசா செலவில்) புக்போஸ்டு மூலம் அனுப்பிவருகிறார்க
அஜ்ஞானவிளக்கு வெளியீட்டில் அச்சுக்கூடம் கண்டுபிடிக்கப்பட்டு உண்
வரலாறுகள் வெளியிடப்பட்டுப் போயினவேயென்று வருந்தி இந்த வழியி
நுழைந்திருக்கிறார்கள். இத்தகைய ஸாமர்த்தியங்கள் இவர்களுக்குத் தாரா
மாக வுண்டென்றும், இவற்றில் வெற்றி இவர்களுடையதே யென்றும் நா
அஞ்ஜலிபந்தத்துடன் அங்கீகரிக்கத் தடையில்லை. இத்தகைய கீழ்வெட்டா
காரியங்களையே இவர்கள் மேன்மேலும் செய்துகொண்டு க்ருதக்ருத்யர்களாகு
க்ராந்திக விஷயங்களில் இவர்கள் பதில்சொல்லித் தீரவேண்டியவை ஒன்றிரண்
டல்ல; பத்தெட்டல்ல; இருபது முப்பதுமல்ல; நூற்றுக்கணக்கில்தானுள்ள
அவற்றில் இவர்களுக்கு மௌனமே தஞ்சமென்பதை நெடுநாளாக உலகமறி
துள்ளது அது ஒருவிதமான கௌரவமேயாகும். அதைவிட்டு அஸுரராக்ஷ
க்ருத்யங்களில் கைவைத்துப் பரிபவப்படுவது உற்றதன்றென்று ஹிதபுத்
யுடன் உபதேசித்து நிற்கிறோம். இது D. R. அவர்களை உத்தேசித்ததல்ல. (

## 10. திருவிருத்தம் ஸேவிப்பதைப்பற்றி

விளக்கொளி தேசிகன் திருவீதிப் புறப்பாடுகளில் சில ஸமயவிசேஷ
களில் நம்மாழ்வாருடைய முதற்பிரபந்தமான திருவிருத்தம் ஸேவிப்பது நெ
நாளைய ஆசாரமாக இருந்து வருகின்றது. இது, மிகவும் ஸம்ப்ரதிபந்நமா
காரண விசேஷத்தாலேயல்லது, ப்ரதிபக்ஷிகள் நினைக்கிறபடி மாத்ஸர்ய
ப்ரயுக்தமன்று. திருநாட்டுக்கெழுந்தருளினவர்களுக்கு ப்ரஹ்மரதத்தி
முன்னே ஸேவிக்கப்படுவதை தேசிகன்முன்னே ஸேவிப்பது விஷமபுத்தியி
லென்று பிரதிபக்ஷிகள் பிரசாரம்செய்வது உண்மையுணர்ச்சியின்மையாலாய

சில மாதங்களுக்கு முன்பு ஓர் உத்தமாச்ரமி ஸ்ரீமுஷ்ணம் சென்றிருந்
ராம். அங்கே தம்முடைய இடத்திற்கு ஸ்ரீபூவராஹப்பெருமாளை யெழுந்தருள
செய்தாராம். அங்கிருந்து புறப்பாடு கண்டருளும்போது அத்யாபகஸ்வாமிக
திருவிருத்தம் ஸேவிக்கத் தொடங்கினார்களாம். யாரோ சிலர் அவரிடம் போ
"ஸ்வாமிந்! நம்மவுத்ஸவத்தில் வேணுமென்று திருச்சந்தவிருத்தம் ஸேவிக்க
தொடங்கியிருக்கிறார்கள் விஷமிகள்" என்று சொல்ல; அதைக்கேட்டு அ
'என்னுத்ஸவத்தில் திருச்சந்தவிருத்தம் ஏதுக்கு? இது கூடவே கூடாத
என்று கத்தினாராம். கிரமமாக கோஷ்டி நடந்ததாம். திருவிருத்தம்—திருச்ச

விருத்தம் என்கிற பேதமும் அறியாமலும், இதில் இன்னது விஷயம் என்பதைக் கூட அறியாமலும் கத்துகின்றவர்களைப்பற்றி நாம் என்ன சொல்லுவது !

தேசிகன் திருமுன்பே திருவிருத்தம் ஸேவிப்பதன் உபபத்தியை உணர்த்துகிறோம். நாலாயிரதிவ்யப் பிரபந்தத்தினுள் தேசிகன் வியாக்கியான மிட்டருளினது திருவிருத்தத்தின் முதற்பாசுரத்திற்கும், பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தான அமலனுதிபிரானுக்கும் ஆக இவையிரண்டுக்குமே. அமலனுதிபிரானைத் திருவீதிகளில் ஸேவிப்பதில்லாமையாலே தேசிகனுடைய ஆஸ்தானங்களில் மட்டும் அது ஸேவிக்கப்படுகிறது. திருவிருத்தத்திற்கும் தேசிகனுக்குமுள்ள ஸம்பந்த விசேஷத்தை நவீநர்கள் தெரிந்துகொள்ள ப்ரஸக்தியேது ? முநிவாஹநபோகமென்று பெயரிட்டு அமலனுதிபிரான் வியாக்கியானம் பணித்து அதை ஒரு ரஹஸ்ய க்ரந்தமாக்கினதுபோல, உபகார ஸங்கிரஹமென்று பெயரிட்டுத் திருவிருத்த முதற்பாட்டுக்கு மிகவிபுலமான வியாக்கியானமருளிச்செய்து அதையொரு ரஹஸ்யக்ரந்தமாக்கியுள்ளார். முப்பத்திரண்டு ரஹஸ்யங்களுள் இஃது இருபத்தைந்தாவது ரஹஸ்யமாக விளங்குகின்றது. இது மூன்று அதிகாரங்கள் கொண்டது. இந்த ரஹஸ்யத்தின் முகப்பில்தான் "தந்தையென நின்ற தனித்திருமால்தாளில் தலைவைத்தோம் சடகோபனருளினலே" என்று தலைக்கட்டும் பாசுரமருளியுள்ளார். உபகாரஸங்க்ரஹமென்று விலக்ஷணமான திருநாமம் சாற்றியருளினர் இந்த ரஹஸ்யத்திற்கு. இதன் முடிவில் *அயமப்யபரோ மஹோபகார:* என்றொரு அற்புதமான சுலோகம் பணித்துள்ளார். நம்மாழ்வார் செய்தருளின உபகாரத்திற்கு மேலே தாம் இந்த ரஹஸ்யத்தை இயற்றியது மஹோபகாரமென்று தலைக்கட்டினர். இதில் க்ருதஜ்ஞதை காட்டவேண்டியே ஸ்வாமி திருவுள்ளத்திற்கு மிகவுகப்பாய்ப் பரமோபகார ப்ரகாசகமான திருவிருத்தத்தை ஸ்வாமியின் திருமுன்பே ஸ்வாமியின் திருவவதாரநன்னாளில் ஸேவித்து வருவது முறை.

இது தவிர மற்றொரு காரணமுமுண்டு. கோயில் திருமலை பெருமாள் கோயிலென்று சிறப்புறும் மூன்று திவ்யதேசங்களை விசேஷித்து ஸ்ரீவைஷ்ணவ வுலகம் போற்றி வருவதானது இம்மூன்று திவ்யதேசங்களையே நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமான திருவிருத்தத்தில் மங்களாசாஸனம் செய்தருளினுரென்பதுபற்றி. பெருமாள் கோயிலென்பது காஞ்சீபுரி. இம்மஹாபுரியில் தேவப்பெருமாளை *இமையோர் தலைவா !* என்று முதற்பாட்டிலே போற்றினர். திருவெஃகாவென்கிற ஸ்ரீயதோக்தகாரி ஸந்நிதியை *நானிலம் வாய்க்கொண்டு* என்கிற இருபத்தைந்தாம் பாட்டில் "கண்ணன் வெஃகாவுது" என்று போற்றினர். அப்பாசுரத்திலேயே "அம்பூந்தேனிளஞ்சோலை அப்பாலது" என்றதனுல் திருத்தண்காவெனும் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியை மங்களாசாஸனம் செய்ததாகச் சொல்லிப்போருவதுமுண்டு. இந்த நிர்வாஹத்தை நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையிலே விசதமாகக் காணலாம். தீபப்ரகாசன் ஸந்நிதிக்குத் தண்கா என்று திருநாமம்; குளிர்ந்த சோலையென்று பொருள். அதுவே வடமொழியில் ஶிமோபவநமெனப்படுகிறது. மேலேகாட்டின திருவிருத்தப்பாசுரத்தில் 'அம்பூந்தேனிளஞ்சோலை திருவெஃகாவுக் கருகிலுள்ளது' என்று சொல்லப்பட்டிருப்பதால் இப்பாசுரம் திருத்தண்காவுக்கும் மங்களாசாஸனபரம் என்று திருவுள்ளம்பற்றிய பெரியார்கள் இக்காரணத்தினுலும் விளக்கொளி வேதாந்தவாசிரியர் திருமுன்பே அவரது திருநக்ஷத்திரத்தன்று அவருடைய திருமுகமலர்ச்சிக்காகவே திருவிருத்த ஸேவையை நியமித்து நடத்திவருவது நெடுநாளைய அனுட்டானம்.

இப்போது இங்கு நாம் காட்டிய இரண்டு காரணங்களும் ஸமப்ரதா கள். திருவிருத்தத்தில் அச்லீலமான பொருள் யாதொன்றும் கிடையவுங் இ யாது. "புதுத்தெய்வங் கொண்டாடுந் தொண்டீர்!" என்று அழைக்க நி நவீநர்கள் நன்று தீதென்கிற விவேகமின்றிக்கே எதிலும் ஆக்ஷேபம் கா வேண்டியதென்று கடமையாகக்கொண்டு இந்த திருவிருத்த ஸேவை ஹாஹாகாரம் செய்துவந்தபடியால் இவ்வாண்டில் நேற்றுப் புரட்டாசித் தி வோண மஹோத்ஸவத்தில் இதை நிறுத்தச்செய்தோம் நாம். இது *து துங்யாயத்தாலே செய்ததத்தனை; அப்படி நாம் நிறுத்தினது தேசிகன் திரு ளத்திற்கு மிகவும் அநபிமதமாயிருந்ததென்பதை அன்று அசிந்திதமாக நம நேர்ந்த சாரீரக்லேசத்தினாலுணர்ந்து க்ஷமைவேண்டித் துயர் தீர்ந்தோம். (1

## 11. கீதாதாத்பர்ய தீபமும்—நிகமபரிமலமும்

அடியேன் மணவாள மாமுனிகள்வைபவ மெழுதியதில் மாமுனிகள் திவ்ய ஸூக்திகளைப்பற்றி யெழுதுகையில் "கீதைக்குத் தாத்பர்யதீப மெ ன்றொரு வியாக்கியானமிட்டருளினர்" என்றெழுதி அதன்கீழ் ஒரு டிப்பணி டிருக்கிறேன்; அதாவது,

"யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் "கீதைக்குத் தாத்பர்ய தீபமென்றொ வியாக்கியானமிட்டருளி" என்றுள்ளது. சில ஆண்டுகட்கு முன் கா ஸுதர்சன அச்சுக்கூடத்தில் தேவநாகரலிபியில் மாமுனிகளருளிச்செ தாக ஒரு வியாக்கியானம் அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த வியாக்கியா மாமுனிக ளருளிச்செய்ததுதானென்று அதில் விரிவான பூமிகையும் (அ தாசார்ய பாதரால்) வெளியிடப்பட்டிரா நின்றது. இருந்தாலும், அதைப்ப ஆராய்ச்சிசெய்த காலத்தில் அது மாமுனிக ளருளிச்செய்ததன்றென் மாமுனிகளுக்குப் பிற்பட்டவரான அபிராமவராசார்ய ரென்கிற வொருவ பணிக்கப்பட்டதென்றும் தேறிற்று. அதீந்த்ரியமான விஷயத்தில் சிறி னாகிய அடியேன் நிர்ணயித்துக்கூற அநதிகாரி. மாமுனிகளருளிச்செ கீதாதாத்பர்யதீபம் இப்போது கிடைக்கவில்லையென்றே அடியேனுடை கொள்கை."

என்றெழுதியிருக்கிறேன். இதைக்கண்ட பிரதிபக்ஷிகள்—"மாமுனிகள் பணி கீதாவியாக்கியானம் இப்போது கிடைக்காமலிருக்கச் செய்தேயும் அது அவத திருந்ததாகவும் லுப்தமாய்விட்டதாகவும் எழுதியிருக்கின்ற அண்ணங்கராச யர் நிகமபரிமலத்தைப்பற்றியும் இவ்வண்ணமாகவே ஏன் எழுதியிருக் கூடாது; தேசிகன் திருவாய்மொழிக்கு வியாக்கியானமாக நிகமபரிமலமெ ன்றொரு க்ரந்த மருளிச்செய்திருந்து அது லுப்தமாய்விட்டதென்று நாங்களெழு கொண்டால் இதை எதற்காக இவர் க்ஷேபிக்கிறார்? உலகில் எத்தனையோ ம களில் எத்தனையோ நூல்கள் தோன்றியிருந்து பிரசாரமடையாமல் லோபமடை திருக்கவில்லையா? அப்படி நிகமபரிமலமும் தோன்றியிருந்து லோபித்துவி தென்றால் இதைக்கூட இவர் பொறுக்கமாட்டாமல் ஏசுகின்றாரே; எவ்விதமா ஏசியிருக்கிறாரென்றால்;

"ஒரு தீர்க்க ப்ரஹ்மசாரி நெடுநாளாகத் தனக்கு விவாஹமாகாதிருந் அவமானத்தைத் தீர்த்துக்கொள்ள வேண்டி உப்பிலியப்பன் ஸன்னிதிக்குச் சென்று, நாளது தைமீ 5வ தனக்கு விவாஹம் நடத்த நிச்சயித்திருப்பதாக ஒரு பெண்ணின் பெயரைக் குறிப்பிட்டு சுப முஹூர்த்த பத்ரிகை அச்சிட்டு பந்துமித்திரர்களுக்கு அது தைமீ 6வக்குப் பிறகு சேரும்படியாக அனுப்பி

விட்டு அங்குமிங்கும் சிலநாள் திரிந்திருந்து பிறகு ஒருநாளில் அந்தப்பெண் ஆசாரியன் திருவடி யடைந்திட்டதாக அனைவர்க்கும் மரணக்கடிதங்க ளனுப்பிவிட்டு 20 நாள் பொறுத்து விடுவந்து சேர்ந்து "ஐயோ! அவ ளுடைய முகம் எவ்வளவு அழகு! தெரியுமா? கூந்தல் என்ன அழகு தெரியுமா! குரல் என்ன கம்பீரந் தெரியுமா?' என்று பலபலவுஞ் சொல்லிப் புரண்டழுது போதைப் போக்கினனும். இக்கதைதான் நினைவுக்கு வருகின்றது."

என்றன்றோ ஏசியிருக்கிறார். இந்த ஏச்சு மணவாளமாமுனிகள் ஸாதித்திருந்த தாகவும் லுப்தமாய் விட்டதாகவும் சொல்லப்படுகிற கீதா வியாக்கியான விஷயத்தில் சேராதோ?" என்றிப்படி யெழுதுகிறார்கள்.

இதற்குப் பண்டித போக்யமாக பதில் தெரிவிக்கிறோம். மேலே உதா ஹரிக்கப்பட்ட தீர்க்க ப்ரஹ்மசாரி கதை நாமெழுதியதன்று. ஆனாலும் நாமுகந்ததே அது. அக்கதையைக் கீர்த்தி மூர்த்தியான இஞ்சிமேட்டழகிய சிங்கர் கடாக்ஷித்தருளித் திருவுள்ளம் மிகவுகந்து 'இக்கதை மிகவும் பொருத்த மான த்ருஷ்டாந்தமே; வீணான கல்பனைகளுக்கு இதுதான் தகுந்த வாய்மூடி' என்று ஸதஸ்ஸிலருளிச் செய்யும்படியாயிருந்ததென்று அக்காலத்தில் மிகவும் ப்ரக்க்யாதமான விஷயமிது.

"நிகமபரிமலம் அவதரித்திருந்தது; அது லோபித்து விட்டது" என்று இவ்வளவே எழுதப்பட்டிருந்தால், இதைப்பற்றி யாரும் வாய்திறக்க வழியே யிராது. இதன் ப்ரஸ்தாவமெடுத்த D R. அவர்கள் என்ன எழுதியிருக்கிறு ரென்றால்; அதை நாம் ஒருகால் அநுவதிப்பதும் மஹாபசாரமாயிருக்கப் பல கால் அநுவதிக்க நேருவது அஸஹ்யாபசாரமேயாகும். தேசிகன் ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே "தோஷாநுசிந்தநார்த்தா ஸ்ம்ருதிரபி தூரீகரோதி வைராக்யம்" என்று ஸாதித்த கணக்கிலே இந்த அநுவாதந்தானும் நமக்கு மஹாபாதகமாகு மென்பதில் ஐயமில்லை; ஆனாலும் ஆசாரியர்களின் திருவடித்தாமரைகளிலே க்ஷமாப்ரார்த்தனையை முன்னிட்டுக்கொண்டு அநுவதிக்கலாகிறது.

"ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களைக் கண்ணுற்று அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச் செய்த எழுபத்தினாலாயிரம் கிரந்தங்கள்கொண்ட நிகமபரிமல மென்னும் ஓர் அழகிய வியாக்கியானம் ஸ்வாமியால் தம் குமாரர்க்கு முன்பே கால க்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்பட்டிருந்தது" (D. R.)

என்றெழுதப்பட்டுள்ள இவ்வொரு விஷயத்தை யெடுத்துக்கொள்வோம். ஆறா யிரப்படியென்பது திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச் செய்த வியாக்கியானம். இது மிகவும் சுருக்கமானது. இதற்குப் பின் தோன் றிய வியாக்கியானங்களாவன—நஞ்சீயருளிய ஒன்பதினாயிரப்படியும், பெரிய வாச்சான் பிள்ளையருளிய இருபத்துநாலாயிரப்படியும், வடக்குத் திருவீதிப் பிள்ளையருளிய ஈடுமுப்பத்தாறாயிரப்படியும், வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயருளிய பன்னீராயிரப்படியுமாம். இவை தவிர வேறு ஒருவியாக்கியானமும் தேசிகன் காலத்திற்குமுன் தோன்றியதில்லை. ஒன்பதினாயிரப்படி முதலிய அந்த நான்கு வியாக்கியானங்களிலும் தோஷங்கள் இருப்பதாகவும் அவற்றை தேசிகன் கண்டு மனம் நொந்ததாகவும் அந்த தோஷங்களையெல்லாம் களைவதற் காக அவர்தாம் நிகமபரிமலமென்கிற விஸ்தார வியாக்கியானமொன்று வெகு அழகாக இட்டதாகவும் எழுதப்பட்டிருக்கிறது.

அந்த நிகமபரிமலம் இப்போது உள்ளதோவென்று கேட்டால், ஐயோ! அன்றைக்கே அது அந்தர்த்தானமாய்விட்டதே! யென்று கண்ணீர்மழை பெருக்குகிறார். அது எப்படியாவது போகட்டும்; ஒன்பதினாயிரப்படி முதலிய நான்கு வியாக்கியானங்களில் தோஷங்களிருப்பதாக எழுதுகிறவர் ஆறாயிரப் படியையும் அந்த நான்கு வியாக்கியானங்களையும் சிறிதாவது ஸேவித்தவராக இருத்தல் வேண்டும். ஒன்றிலும் ஓரக்ஷரத்தையும் பாராதவரும் பார்க்கவில்லாத வருமானவர், தம்முடைய ஸம்பிரதாயத்தில் அப்படிப்பட்ட வியாக்கியானங்கள் இல்லையேயென்கிற வருத்தத்தினாலும் இதர ஸம்ப்ரதாய ஆசார்யர்களைப்பழிக்க வேணுமென்கிற பாரிப்பினாலுமே மேலே காட்டியவிதமாக எழுதி அஸஹ்யாப சாரப் படுகுழியில் விழுந்திருக்கிறார். உண்மையில், இந்த அட்வகேட் சுத்த ஸம்பிரதாயமென்று தாம் அபிமானித்திருக்கின்ற வொருநூதன ஸம்பிரதாயத் திற்கு ஆறாயிரப்படியோ மற்ற வியாக்கியானங்களோ எல்லாம் வாசியற விருத்தமானதே. இதில் ஸந்தேஹலேசமுமில்லை. மற்ற வியாக்கியானங்களிற் காட்டிலும் ஆறாயிரப்படியே முந்துற முன்னம் இவர்களுக்கு விலக்காகத்தக்க தென்பதும் சிலாலிகிதம், இது ப்ரதிஜ்ஞாமாத்ரமன்றிக்கே விசதீகரிக்கப்பட வேண்டியே தேசிகஹ்ருதயமென்னும் நூலை இத்துடன் வெளியிட்டிருக்கிறோம்.

உண்மை இப்படியிருக்க, ஆறாயிரப்படியில் மஹார்த்தங்கள் கண்டுவிட்ட தாகக் காட்டிக்கொண்டு, இதர வியாக்கியானங்களை துஷ்டங்களென்று பழிப் பது மஹத்தான ஸாஹஸம். வியாக்கியானங்கள் நிற்க; வியாக்கியேயங்க ளான [மூலமான] திவ்யப்ரபந்தங்களே இவர்கள் கொண்ட ஸம்பிரதாயத்திற்கு நேர்முரணா யிருக்கும்போது வியாக்கியானத்தில் அனுகூலமாக ஓரக்ஷரமாகிலுங் காண அவகாசமேது? மூலத்திற்கு விருத்தமாக ஆறாயிரப்படி எங்ஙனே அமையு மென்று ஆராயமாட்டிற்றிலரே இவர். விஷயங்களை யெடுத்துக்கொண்டு அலசி யலசி ஆராய்ச்சி செய்யும் சிரமத்தை ஏற்றுக்கொண்டாலல்லவோ ‘ஆறாயிரப் படியில் நமக்குள்ள அனுகூலமென்ன? இதர வியாக்கியானங்களில் நமக்குள்ள பிரதிகூலமென்ன?’ என்பதைப்பகுத்துணரமுடியும். ஈடுமுதலானவியாக்கியானங் களில் தோஷமிருப்பதாக தேசிகன் திருவுள்ளம் பற்றியிருந்தால் அந்த தோஷம் ஆறாயிரப்படியிலுமிருப்பதாகவே திருவுள்ளம்பற்றி யிருக்கவேணுமென்பது திண்ணம். இவ்விஷயம் திருவாய்மொழியின் ஸகல வியாக்கியானங்களையும் தேசிகனுடைய ஸகல ஸ்ரீஸூக்திகளையும் கரதலாமலகமாகக் கண்டவர்களுக்கே தெரியலாகும். இவையொன்றிலும் அந்வயமில்லாதவரும் ஏதோ சில ஸ்தோத் ரங்களில் கண்ண நீரைச் சொரியுமவருமானவர் உலகமெல்லாம் கொண்டாட நின்ற ஸதாசார்ய வியாக்கியானங்களை தோஷமுடையனவாகப் பழிப்பதும் ககநாரவிந்த கசச்ருங்காதி ஸஹோதரமானவொரு வியாக்கியானத்தை அழகிய வியாக்கியானமென்பதும் வீணானவொரு அபிமானத்தின் க்ருத்யமா மத்தனை யன்றோ. இதனிலும் கொடிய அபசாரம் வேறில்லை.

இவ்வபசாரம் இவர்க்கு மனஸ்பூர்த்தியாகவே நேர்ந்ததென்று நினைக்க லாகிறது. இவ்விருள் தருமாஞாலத்தின் செயலுக்கு ஆட்படாதாருமுளரோ? *அநுதாபாத் உபரமாத் ப்ராயச்சித்தோந்முகத்வத:, நத்பூரணுச் சாபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதக:* என்ற அற்புதமான வசனத்தை ஸ்ரீதேசிக ரஹஸ்யங்களிற் கண்டிருப் பரேயிவர். அதனைப் புந: புந: ஆவர்த்தனஞ் செய்து தூய்மை பெறுவதே இவர்க்குப் பாங்காகும். இவ்வையங்கார் மாத்திரமேயன்று; இவரைப்போன்ற மற்றுஞ் சிலரும் தேசிக சரித்திரமென்று எழுதியுள்ள நவீனச்சுவடிகள் யாவும் ப்ராமாணிகமான ஆசார்ய சம்பூக்ரந்தத்தோடு சிறிதும் இணங்காதவை. இவர்

கள் வீணுகப் பூர்வாசாரியர்களேயும் அவர்களின் திவ்ய ஸூக்திகளேயும் நிந்திப்ப தற்கென்றே தேசிக சரித்திரமெழுதினவர்கள்.

இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வந்து அதனை உபஸம்ஹரிப்போம். மணவாளமாமுனிகள் கீதைக்கு ஒரு வியாக்கியானமிட்டருளினுர்—என்று இவ்வளவே யெழுதி யுள்ளார்களத்தனை போக்கி வேருெழுத்து மெழுதிற்றிலர். அந்த வியாக்கியானம் கீதாபாஷ்யத்திலுள்ள அஸ்வாரஸ்யங்களே யெடுத்துக் காட்டத் தோன்றியதென்ருே, தாத்பர்ய சந்த்ரிகையிலுள்ள அபார்த்தங்களேக் களேயத் தோன்றியதென்ருே ஒருவரால் எழுதப்பட்டிருக்குமாகுல், அந்த க்ரந்தம் இருந்ததாகவும் லுப்தமாய் விட்டதாகவும் நமது கையால் எழுதப் பட்டிருக்கவேமாட்டாது. ஸ்ரீமந்நாதமுனிகள் ந்யாயதத்வமென்றொரு க்ரந்தம் அருளிச்செய்திருந்ததாகவும் அது லுப்தமாய் விட்டதாகவும் சொல்லி வருகிருேம். அதிலுள்ள விஷயம் இன்னதென்று ஒருவர்க்கும் தெரியாததலால் விஷயத்தைப்பற்றி யாருமே வாய்திறப்பதில்லே. அதுபோல, "நிகமபரிமலமென்று ஒரு வியாக்கியானம் தோன்றியிருந்து அது லோபித்து விட்டது" என்று இவர்களெழுதியிருந்தால் இதில் ஏச்சுக்கு இடமேது? தீர்க்கப்ரஹ்மசாரி கதை வெளிவர ப்ரஸக்திதானுண்டோ?

"நிகமபரிமலமென்னும் ஓர் அழகிய வியாக்கியானம்" என்றெழுதுவதே அஸமஞ்ஜஸம். அதைக் கண்டவர்களுக்கன்ருே அதனழகைப் பேச உரிமையுண்டு. தேசிகனுடைய ஸமகாலத்தவர்கள் யாரேனும் நிகமபரிமலத்தையும் அதன் அழகையும் கண்டிருந்து எழுதிவைத்திருந்தால் அதனை அநுவதிக்கிற முறையிலே 'அழகிய வியாக்கியானம்' என்று இவருமெழுதலாம், ககநாரவிந்தசேகரனை வந்த்யாஸுதனழகை வருணிப்பது போன்றதன்ருே இவ்வழகு பேச்சு. இதற்குமேலே, தேசிகனுக்கு எதையும் கண்டிப்பதுதான் தொழிலென்று கொண்டு அவரை மூஷிகாவதாரமாக்கி "அந்த நிகமபரிமலத்தில், ஆருயிரப்படிக்குப் பின்தோன்றிய வியாக்கியானங்களேயெல்லாம் கண்டித்தொழித்து விட்டார்" என்கிறவர் ஆருயிரப்படியையும் கண்டித்து விட்டதாக எழுதலாமே.

தேசிகனெழுதிய முநிவாஹநபோகமென்னும் அமலனுதிபிரான் வியாக்கியானம் லுப்தமாகவில்லேயே. இதில், பெரியவாச்சான்பிள்ளே வியாக்கியானம் எவ்வளவு கண்டிக்கப்பட்டிருக்கின்றதென்பதைக் கண்டறிந்து காட்டலாமேயிவர்கள். தேள் பாம்பு முதலிய விஷஜந்துக்கள்போலே கொட்டியும் கடித்தும் தலேமறைந்தோடுமாபோலே அபத்தங்களேயெழுதி வைத்திட்டு நேர்நின்று விடையிறுக்கமாட்டாதே கிடக்குமிவர்களேப் பொருளாக்கி நாமெழுதுவதும் பழுதே. ஆக, வீணுன அபவாதத்திற்கு ஆஸ்பதமாயொழிந்த நிகமபரிமலத்தின் ஸத்தையை மறுப்பது நியாயமென்றும், எவ்விதமான அபவாதத்திற்கும் இலக்காகாததும் முன்னேர்களால் காட்டப்பட்டதுமான கீதாவியாக்கியானத்தின் ஸத்தையை மறுக்க ஔசித்ய லேசமுமில்லேயென்றும் நிகமித்தாயிற்று.

## 12. பன்னிரண்டாவது உபந்யாஸம்—கம்பர் காலத்தைப்பற்றி

எந்த விஷயத்திலும் ஆர அமர ஆராய்ச்சி செய்வதற்கு முன்பு ஒரு வகையான ஞானமும், தக்க மிக்க ஆதாரங்களுடன் ஆராய்ச்சி செய்யப்பெற்ற பின்பு வேறுவகையான ஞானமும் உண்டாவது பெரும்பான்மையான இயல்பு. இது நமக்கு மட்டுமன்று, உலகிற்பிறந்த மானிடரனைவர்க்குமொத்ததேயாம், இவ்வகையில் இளமையில் விசேஷ ஆராய்ச்சி தோன்றப்பெருத காலத்தில் சிலரோ பலரோ சொல்லிப்போரும் விஷயங்களே உண்மையென நம்பிவிடு

கிறோம். பிறகு ஆராய்ச்சிகளாலும் ஆப்தோபதேசங்களாலும் முன்னைய கொள்கையை மாற்றிக்கொள்ள நேர்ந்தால் அதுகண்டு ' இவன் பிராமாணிகன் ' எனப்புகழ்வதும் மகிழ்வதும் பொருந்துமேயல்லது இகழ்வது ஏலாது. ' முன் னம் நாம் எழுதி வைத்ததற்கு மாருக அதனை வேறுபடுத்தி எழுதுவது தகாது ' என்று கொண்டு பிடிவாதமாக முந்தியதையே ஸ்தாபிக்கமுயல்பவர் மூர்க்க ரெனப்படுவர். அந்த மூர்க்கத்தனத்தை விட்டு உய்வது விசேஷஸுக்ருத பலனுகுமத்தனை.

இதற்குச் சார்பாக இங்கு ஒரு விஷயம் கேண்மின். பெரிய திருமொழி யில் ஒன்பதாம்பத்தில் மூன்ருவதான திருப்புல்லாணிப்பதிகத்தின் முதற் பாட்டை " தன்னை நைவிக்கிலேன் " என்றே பெரியார் பலருங்கூட ஓதிவருகிருர் கள். அடியேனுக்கும் இதுவே பாடமாயிருந்ததனுல் இந்தப் பாடத்தின்படியே திவ்யார்த்த தீபிகையுரையும் எழுதி (ஞு1930ல்) அச்சிட்டு விட்டேன். பிறகு ஒரு ஸமயம் கோயிலுக்கு விடைகொண்டிருந்தபோது அவ்விடத்தில் உபய வேதாந்த ப்ரவசந துரந்தரராக எழுந்தருளியிருந்த (வைகுண்டவாஸியான) ஸ்ரீமத் பத்தராவிஸ்வாமி தமது திருக்கையால் சோதித்திருந்த பெரியதிருமொழி வியாக்கியான ஸ்ரீகோசம் (தெலுங்குலிபி) ஒரு ஸ்வாமியிடத்தில் ஸேவிக்கக் கிடைத்தது. அதில் நைவிக்கிலேன் என்றவிடத்து (லே) என்பதை யடித்து (லெ) என்று திருத்தப்பட்டிருந்தது. அதைக்கண்டவுடனே அடியேனுக்குண் டான ஆனந்தம் மனமொழிகளுக்கு எட்டாதது. அப்பாடத்தின் ஸ்வாரஸ்யம் அநாயாஸமாக உடனே மனத்திற்பட்டது. இதுவொரு பெரியபாக்கியமடியே னுக்கு. அந்தத் திருப்புல்லாணிப்பதிகத்தில் (2, 6 பாட்டுக்களில்) " உருகி நெஞ்சே நினைந்திங்கிருந்து என் ?" " எள்கிநெஞ்சே நினைந்திங்கிருந்து என் ?" என்று வருவதால் இப்பாட்டில் " தன்னை நைவிக்கில் என் ?" என்றிருப்பது தான் பொருத்தமானதென்று பட்டது. உடனே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை ஊன்றி ஸேவிக்கையில் இந்தப் பாடமே பிராமாணிகமென் கிற உறுதியுமுண்டாயிற்று. அப்போது அடியேனுடைய பெரியதிருமொழி திவ்யார்த்ததீபிகை மறுபதிப்பு நடந்து கொண்டிருந்தது. அதில் திருத்தின தோடு நில்லாமல் " சிலகாலம் நாமும் இங்குத் தவருன பாடம் கொண்டிருந்த தற்கு அநுதபித்தோம் " என்றுமெழுதி அநுதாபம் காட்டியிருக்கின்றேன். இவ்வண்ணமாக அடியேன் காட்டக்கூடிய விஷயங்கள் ஒன்றிரண்டல்ல; பலபலவுள. உண்மை மனத்திற்பட்டால் ஈஷத்தும் ஆத்மவஞ்சனை செய்ய கில்லேன். என்னுடைய தவறையே ஸ்தாபிக்க ஆசை கொள்ளமாட்டேன்.

என் விஷயமிருக்கட்டும்; ப்ராமாணிகாக்ரேஸரரான தேசிகன் விஷய மொன்று காட்டுகிறேன். ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் *வபுராதிஷு யோபிகோபிவா* என்கிற ச்லோகத்தில் ' அஹமத்யைவ மயா ஸமர்ப்பித: ' என்று தாம் ஆத்ம ஸமர்ப்பணம் செய்ததாக ஸாதித்து, உடனே *மம நாத ! யதஸ்தி* என்கிற அடுத்த சுலோகத்தில் " ப்ரபுத்ததீ: அதவா கிம் நு ஸமர்ப்ப யாமி தே " என்று, கீழ்ப்பண்ணின ஸமர்ப்பணத்திற்கு அநுதாபம் காட்டியிருக் கிருர். ஸ்வாமி தேசிகன் அவ்விடத்திற்கு பாஷ்யமிட்டருளினபோது ' *மம நாதேத்யாதியான இந்த சுலோகம் முந்தின ச்லோகத்திற்கு விவரணரூபமே யல்லது அநுசயம் காட்டுகிறதன்று ' என்று திருவாய் மலர்ந்தருளினர். பிறகு ஸமயாந்தரத்தில் ஆழ்ந்த விமர்சம் செய்தருள நேர்ந்தபோது *மமநாதேத்யாதி யான ச்லோகத்தை அநுசயபரமென்று சொல்லுவதில் பிழையொன்றுமில்லை யென்று திருவுள்ளத்திற்பட்டதனுல் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாங்க ப்ரபதநாதிகாரத்திலே—" ஸ்தோத்ரத்தில் *வபுராதிஷு......" என்று தொடங்கி

யருளிச்செய்து வருகையில் "இதுக்குமேல் *மம நாத! யதஸ்தி* என்கிற ச்லோகத்தில் இஸ் ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுசயம் பண்ணிற்றும்" என்றருளிச் செய்திருக்கக் காண்கிறோம். 'ஸ்தோத்ர பாஷ்யம் செய்தருளும்போதிருந்த அபிப்ராயமேதான் இங்கும்' என்னப்போகாது. 'அநுசயபரமன்று' என்றது அங்கு. அநுசயபரந்தானென்று திருவுள்ளம்பற்றினமை இங்கு வ்யக்தம். இவற்றுள் எது முந்தின க்ரந்தம் என்கிற விவாதமேற்பட்டு 'அநுசயபரமன்று என்றதுதான் ஸித்தாந்தம்' என்றாலும் அதில் இப்போது விசாரமில்லை. விமர்சத்தினால் அபிப்ராயத்தை மாற்றிக்கொள்வது ப்ராமாணிக க்ருத்யம் என்றது ஊர்ஜிதமேயாகுமன்றோ. ர. ஸாரத்திற்கு சேட்லூரார் ஓர் உரையும், ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஒரு வியாக்கியானமும் வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றில் அநுசயம்.என்பதற்கு பச்சாத்தாபம் பொருளென்று காட்டினதொழிய வேறொரு விமர்சமும் கண்டதில்லை. இஞ்சிமேடு ஸ்வாமி தாம் ஸ்தோத்ர பாஷ்யம் ஸேவித்தவரென்னுமிடத்தைக் காட்டிக்கொண்டிருக்கிறார்; சேட்லூரார் அது செய்திலர் என்னுமித்தனையே வாசி. நம்முடையதாக வொரு வியாக்கியானம் வெளிவரவேணுமென்னு மாசையையே இருவரும் தலைக்கட்டிக்கொண்டார்களாயிற்று. நிற்க.

இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருவோம். கம்பர் தாம் இராமாயணமியற்றி ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் திருமுன்பே அரங்கேற்றினர் என்பதாகவொரு ப்ரவாதம் ப்ரஸித்தமாயிருந்ததனால் [இருப்பதனால்] இது கொண்டும், அடியேனுடைய ஈடுபாட்டிற்கு மிக வுரியவராயிருந்த கீர்த்திமூர்த்தியான வைத்தமாநிதி சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமியும் அங்ஙனே எழுதிவைத்திருந்தபடியாலும் அதில் விப்ரதிபத்தி யொன்றும் தோன்றாமல் கம்பர் நாதமுனிகளின் காலத்தவர் என்று கொண்டிருந்தேன், அங்ஙனமே எழுதியுமிருந்தேன். பிறகு ஸமயவிசேஷத்தில் சில விமர்சங்கள் தோன்றின. உலகமுணரத் தெரிவிக்கிறேனதை.

கம்பராமாயணம் கிட்கிந்தாகாண்ட முடிவில் மகேந்திரப்படலத்தில் (26) அனுமன் பேருருவங்கொள்ளுதலைத் தெரிவிக்குமதான—

"பொருவருவேலைதாவும் புந்தியான் புவனந்தாய
பெருவடிவுயர்ந்த மாயோன் மேக்குறப் பெயர்ந்ததாள்போல்
உருவறிவடிவினும்ப ரோங்கின னுவமையாலும்
திருவடியென்னுந் தன்மை யாவர்க்குந் தெரியநின்றான்."

என்கிற பாட்டில் அனுமானுக்குத் திருவடியென்கிற திருநாமம் அந்வர்த்தமாயிற்றென்று தெரிவிக்கப்பட்டுளது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில்—சக்ரவர்த்திதிருமகனுரைப்பெருமாளென்பது, லக்ஷ்மணனை இளையபெருமாளென்பது, ஜடாயுவைப் பெரியவுடையாரென்பது, அனுமனைத் திருவடியென்பது............ இத்தகைய வ்யபதேசங்கள் எம்பெருமானார் காலத்திற்கு முன்பு இருந்ததில்லையென்றும், அவர் காலத்தில் தோன்றி பட்டர் காலத்தில் அபிவிருத்தி பெற்றனவென்றும் பெரியார் கூறுவர். திருவடியென்கிற சொல்லால் அனுமனைக் குறிப்பிட்ட கம்பர் நாதமுனிகள் காலத்தவராயிருக்க ஔசித்யமில்லை. பட்டர் காலத்தவராகவே யிருத்தல் வேண்டும். பட்டர் ஸாதித்தருளும் அர்த்தவிசேஷங்களும் கம்பராமாயணத்தில் காணக்கிடைப்பதனால் இதுகொண்டும் பட்டர் காலத்தவரேயென்று கொள்ளலாகிறது.

மற்றொரு முக்கிய காரணம்; சடகோபரந்தாதியில் "கூட்டங்கள் தோறும் குருகைப்பிரான்குணங் கூறுமன்பரீட்டங்கள் தோறுமிருக்கப் பெற்றோம்" என்றொரு பாட்டுப் பாடியிருக்கின்றார். ஸ்ரீமந்நாதமுனிகள் திவ்யப்பிரபந்த மூலத்தை ஸம்பாதிக்கப்பட்ட பாடுகள் பிரபலமாயிருந்தன. அக்காலத்தில் குருகைப்பிரான் குணங்கூறுமன்பர்களின் கூட்டமும் ஈட்டமும் காண்பதரிதாக வேயிருக்கும். இதுவும் பட்டர் காலத்திலேதான் ஸம்பாவிதம். ஆக இத்தகைய காரணங்களை நாம் உபபாதித்துச் சில ஆராய்ச்சியாளரிடம் சொன்னபோது, அவர்கள் யாவரும் ஒருமிடறாகச் சொன்னார்கள்—"நாங்கள் கம்பரையும் நாத முனிகளையும் ஸமகாலத்தவர்களாகக் கொண்டவர்களல்லோம்; ஏற்கெனவே நாங்கள் வேறு சில காரணங்களைக் கொண்டு கம்பரை கி. பி. பன்னிரண்டாவது நூற்றாண்டிலிருந்தவராகவே அறுதியிட்டிருக்கிறோம்; இப்போது தேவரீர் கூறின காரணங்களையும் அவற்றோடு சேர்த்துக் கொண்டு எங்களுடைய உறுதி யைத் திடப்படுத்திக் கொண்டோம்" என்று. .... .... .... (12)

## 13. பதின்மூன்றாவது உபந்யாஸம்—மணவாளமாமுனிகளின் திருவவதாரஸ்தலத்தைப்பற்றி

மணவாளமாமுனிகள் திருவவதரித்தது ஆழ்வார் திருநகரியிலென்றும், கிடாரம் என்கிற அக்ரஹாரத்தில் மாதுலக்ருஹத்தில் சிலகாலம் வளர்ந்தருளினா ரென்றும் பெரியோர் பகர்வர். எறும்பியப்பாபணித்த ஸ்ரீவரவரமுநிசம்பூக்ரந் தத்தில் இங்ஙனேயுள்ளதென்றும் கூறுவர். திருவவதரித்தது திருநகரியிலன்று; கிடாரத்தில்தான்' என்று வாதம் கிளம்புமாகில் இதை மறுக்க முன்வருவாராரு மில்லை. நாச்சியார் திருமொழியில் பாஞ்சசன்னியப்பதிகத்தில் இரண்டாவது பாட்டு, "கடலிற்பிறந்து கருதாது, பஞ்சசனனுடலில் வளர்ந்துபோய் ஊழியான் கைத்தலத்திடரில் குடியேறித் தீயவசுரர் நடலைப்பட முழங்குந் தோற்றத்தாய் நற்சங்கே!" என்பது. அதை இங்கு அநுஸந்தித்துப் போருவது. எந்த ஸ்தலத்திற்கும் ஸ்வத: ஏற்றமென்பது கிடையாது. மஹான்களின் அவதாரத் தினால்தான் அவ்வோவிடங்கள் ஏற்றம் பெறுகின்றன. "மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்த் தொண்டரடிப்பொடி தொன்னகரம்" "குலசேகர னூரெனவுரைப்பர் வாய்த்த திருவஞ்சிக்களம்" என்னும் பாசுரங்களினால் அறியப்படுகிற மண்டங்குடியும் வஞ்சிக்களமும் ஸாமான்யமான ஊர்களை யொழிய புராணக்ஷேத்ரமுமல்ல, திவ்யதேசமுமல்ல. திருவரங்கம் பெரிய கோயிலிலே வந்து சேர்ந்து ப்ரதிஷ்டிதர்களாகப்பெற்ற ஆசிரியர்கள் பலபலர். அவர்கள் அவதரித்தது ஓரோவிடங்களிலேயாயிருக்கும். மணக்கால்நம்பி, நடாதூராழ்வான் இத்யாதி திருநாமங்களில் செவிப்படுகிற ஊர்கள் ஸாமான் யங்களென்று இகழ்வாராருமிலர். *தீர்த்தீகுர்வந்தி தீர்த்தாநி* என்னும்படியான பெருமைபெற்ற மஹநீயர்கள் அவதரித்த ஸ்தலம் எதுவானாலும் அது விண் ணாட்டினுஞ் சீரியதேயாம்.

வேதாந்தவாசிரியரின் திருவவதார ஸ்தலத்தை இகழ்வாகக்கூறினதாய்க் கொண்டு அஜ்ஞான விளக்குச்சுவடி இந்த விசாரத்தைக் கிளப்பியுள்ளது. இவர்களது மருளை மாய்ப்போமிங்கு. தேசிகன் மிகச் சிறந்த திவ்ய ஸ்தலத்தில் தான் திருவவதரித்தார். *நகரேஷு காஞ்சீ* என்னும்படியான காஞ்சீ க்ஷேத்ரத் தில் திருத்தண்காவென்று ப்ரஸித்தமான விளக்கொளி யெம்பெருமான் ஸன் னிதி பரிஸரத்தில்தான் ஸ்வாமி தேசிகன் திருவவதாரம் செய்தருளிற்று. நவீ

னர்கள் அவரோடு ஸம்பந்தத்தை யேறிட்டுக்கொண்டு கொண்டாட்டங்கள் செய்யப்புகுந்த காலத்தில், அப்பய தீக்ஷிதர் ப்ரதிஷ்டைசெய்த அக்ரஹாரமான தும்பைவனமென்பது துப்பல் என்றும் தூப்பல் என்றும் தூப்பில் என்றும் தூப்புல் என்றும் சிதைந்து வழங்கி வந்ததனுல் இவர்கள் அதன் தத்துவத்தை யுணராதவர்களாய் அந்தத் தூப்பல் சொல்லையிட்டுக் கவிகளியற்றத் தொடங்கினர்கள். இதை நாமும் வெகுகாலம் தெரிந்துகொள்ளாம லிருந்தோம். தீக்ஷிதருடைய ஸந்ததியைச் சேர்ந்த வித்வான்களோடு வார்த்தையாட நேர்ந்த போது அவர்களின் வாக்கிலிருந்து நமக்குத் தூப்பல் தத்துவம் விளங்கிற்று. பிறகு நன்கு ஆராய்ச்சி செய்யத் தொடங்கினேம். ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஸுப்ரஸித்தமான திருத்தண்கா என்னும் திவ்யதேசத்தைவிட்டு, ஸ்ரீவைஷ்ணவர்கள் யாரும் கையாளாத தூப்பல் சொல்லைக் கைப்பற்றினவர்கள் ப்ராசீனர்களாக இருக்க நியாயமில்லையென்றும் இரண்டு மூன்று நூற்றுண்டுகட்கு உட்பட்டவர்களாகவே யிருக்கவேண்டுமென்றும் நிர்ணயிக்கலாயிற்று. அதனை வெளியிட்டோம். இது மிகப் பொருத்தமான ஆராய்ச்சியேயென்று ப்ராமாணிகர்கள் புகழ நின்றேம். இதை மறுக்கச் சரக்கில்லாதவர்கள் "மணவாள மாமுனிகள் கிடாரத்தில் திருவவதரித்தார்" என்று எழுதுமளவால் தும்பைவனமே தூப்பலாயிற்றென்கிற தத்துவம் எள்ளளவும் பங்கடைந்திடாதென்று தெளிக. .... .... .... .... .... .... (13)

## பதினுன்காமுபந்யாஸம்—வைசாகோத்ஸவவாஹனவ்யவஸ்தைபற்றி

நாமெழுதிய வரதன் ஸன்னிதி வரலாறென்னும் நூலில் தேவப்பெருமாளுடைய வைசாகோத்ஸவத்தில் நடைபெறும் வாஹனங்களின் வ்யவஸ்தை அந்தந்த வேளைகளில்நடந்துவரும் திவ்யப்ரபந்த இயல்ஸேவைக்குப் பொருத்தமாக முன்னேர்களால் ஏற்படுத்தப்பட்டதென்று விபுலமாக மூதலித்திருக்கிறேம். இதில் வைமத்யம்காட்ட முன்வருமவர்கள் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் ப்ராவண்யமுடையவர்களாக இருக்க நியாயமில்லை. தங்களுக்கும் ஆழ்வார் திவ்யஸூக்திகளில் ப்ராவண்யமுண்டென்று அபிநயிப்பது ஒருபுறம். அந்த ஸ்ரீஸூக்திகளுக்குப் பெருமை பேசினுல் அதை ஸஹியாமல் ஹாஹாகாரம் செய்வது மற்றொருபுறம். "ஸர்வாத்மநா அஸம்பத்தமாக எழுதினுல் ஹாஹாகாரம் செய்யாதிருக்க முடியுமோ?" என்றும், "இதனுல் திவ்யஸூக்திகளில் ப்ராவண்யம் குலைந்ததாகுமோ?" என்றும் இவர்கள் சொல்ல முன்வரக்கூடும். ஸர்வாத்மநா அஸம்பத்தமாக எழுதுவதென்பது நம்முடைய நூல்களில் லவலேசமும் காட்டமுடியாது. ரஸோக்தியின்பாற்படுத்தி ரஸிகர்கள் உள்குழைந்து அநுபவிக்கக் கூடியதாக விருக்குமேயல்லது அஸம்பத்தமாக எழுதப்பட்டதென்று பழிக்கத் தக்கதாக இராதென்னுமிடம் வித்வத் ரஸிக ஹ்ருதயைகவேத்யம். ப்ரக்ருத விஷயத்தை மறுக்கவேண்டுமானுல் நம்முடைய வரதன்ஸன்னிதி வரலாற்றுக்கு லக்ஷ்யபூதரான D. R. ஐயங்கார் மறுக்க வேணும்; வேறொருவர் மறுப்பதாக இருந்தால் அவர் தம்முடைய நிஜநாமதேயத்தை வெளியிட்டுக்கொண்டு விஷயங்களை விளம்பவேணும். இந்த விம்சதியின் முகவுரையில் நாம் ஸஸாக்ஷிகமாக விளக்கியிருக்கிறபடி க்ருத்ரிமமான முறையில் வெளிவந்ததான அபத்தச் சுவடியைப் பொருள்படுத்தி நாம் அருமருந்தன்ன அர்த்த விசேஷங்களை வாரியிறைப்பதுபற்றி நாம் மிகமிக அநுதபிக்கவேண்டியிரா நின்றது.

தேவப்பெருமாள் ஸன்னிதியில் மட்டுமன்று; பொதுவாக ஸ்ரீவைஷ்ணவாலயங்களில் ஸர்வப்ரகாரத்திலும் திவ்யப்ரபந்தங்களுக்கே ஏற்றம் கொடுக்

கப்பட்டிருக்கின்றது. அதை நாம் ஔசித்யத்தைக் கடவாமல் பொருத்தமான பத்ததியில் வெளியிட்டால் இதற்கு வயிறு வீங்கிச் சாகுமவர்கள் ஆழ்வார் கோஷ்டியில் அந்வயம் பெறவேணுமென்று ஆசைப்படுவது அத்யந்த ஸாஹஸமல்லவா? .... .... .... .... .... (14)

## 15. பதினைந்தாவது உபந்யாஸம்—ப்ரகீர்ண விஷயங்களைப்பற்றி

அஜ்ஞானவிளக்குச்சுவடியில் சாஸ்த்ரார்த்த சர்ச்சைகளுக்கு ஈஷத்தும் ஸம்பந்தப்படாத பலவிஷயங்கள் வீண்வம்பாக வரையப்பட்டிருக்கின்றன வென்பதை முகவுரையில் விபுலமாக நிரூபித்தோம். இன்னமும் சில கேளீர். (1) தேவப்பெருமாள் ஸன்னிதி இயல்கோஷ்டியில் இவர்களை "எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்" என்று சொல்லித் தடுப்பதாக வைத்து இதற்காக வசைமொழி. (2) இயல்கோஷ்டி சில இடங்களிலும் சில ஸந்தர்ப்பங்களிலும் புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருப்பதாக வைத்து அதற்காக உபாலம்பம்............... இங்ஙனே இவர்கள் ஏடுகளை நிரப்புவதற்காகப் பெய்த வம்பு விஷயங்களைப் பற்றி நாம் பேசவேண்டிய அவசியமேயில்லை ஆயினும், இவர்கள் எந்த விஷயத்திலும் ஆர்ஜவமற்றவர்கள் என்பதை மூதலிக்கவேண்டி இவற்றைப் பற்றியும் தத்துவமுணர்த்துவோம். *எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்* என்ற விஷயம் மிகத்தவறு. திவ்யப்ரபந்த பாராயணத்தில் இவர்கள் விருப்ப மேறிட்டுக்கொண்ட காலத்தில் தாங்கள் தனி கோஷ்டியாகவிருந்து தங்களிஷ்டப்படி எதையும் சொல்ல விரும்பிப் பெருமாளுக்குப் பின்னால் இயல்கோஷ்டி ஆரம்பித்தார்கள். நீதிமன்றத்தில் வியவஹாரம விசாரணையிலிருந்தபோது அப்படிச் சில வருஷங்கள் நடத்திவந்தார்கள். அப்போது "இவர்கள் திவ்ய ப்ரபந்தம் ஸேவிக்க விரும்பினால் எங்களுடைய கட்டுப்பாடுகளுக்கு இணங்கி எங்களோடு கலந்து ஸேவிக்கலாமேயல்லது தனிகோஷ்டியாக வரத்தகாது" என்பது பிரபலஆக்ஷேபமாக இருந்தது முடிவுவரையில் இதைத்தான் நியாயாதிகாரிகள் ஆமோதித்தார்கள். "எங்களுடைய குருவின் துதிகளைச் சொல்லாமல் இவர்களின் குருவின் துதிகளைச் சொல்லி ஸேவை நடத்துகிற கோஷ்டியில் நாங்கள் கலந்துகொண்டால் குருத்ரோஹம் பண்ணினவர்களாவோம்" என்பது நீதிமன்றந்தோறும் இவர்களுடைய மறுப்பாக இருந்துவந்தது. இதை ஒரு அதிகாரியும் ஆமோதிக்கவில்லை. குருத்ரோஹம் செய்யக்கடவோமல்லோமென்று இவர்களாக விலகினார்கள். காலைப்பிருண்டிச் சண்டையிடுவோமென்று புகுவாருமுளர். *வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமுங் கொண்மின்* என்பதுதான் ஸாத்விகர்களின் க்ருத்யமாயிருந்து வருகிறது. (2) இயல் கோஷ்டி சில ஸமயங்களில் டதிதாக ஆரம்பிக்கப்படுகிறதென்னும் விஷயத்தைப்பேச வழிப்போக்கர்களுக்கு என்ன அதிகாரம்? கோவில்களில் புராதனமாக ஏற்பட்டுள்ள உத்ஸவங்களைத்தான் செய்வது, புதிதாக எந்த உத்ஸவமும் செய்வதில்லை என்று நிபந்தனை ஏற்பட்டிருக்கவில்லை. நடந்து கொண்டிருந்த உத்ஸவங்களை நிறுத்துவதும், புதிய உத்ஸவங்களைத் தொடங்குவதும் அதிகாரிகளின் இஷ்டத்தையும் ஸௌகரியத்தையும் பொறுத்து ஆகின்றது. அப்படியே இயல்கோஷ்டியும். இதில் இந்த அநாமதேயர்களுக்கு என்ன விசாரம்? "காகஸ்ய கதிவா தந்தா:" என்றாற்போன்ற வீண்விசாரங்களிலே இவர்கள் கைவளரட்டும். நாம் கொண்ட சாஸ்த்ரார்த்த விசாரங்களுக்கு இவர்கள் மறுமொழி கூறுவதை விட்டு இத்தகைய கதைகளைப் பரப்புவது இவர்களுக்கு மிகவும் அவசியமே. .... .... .... .... .... (15)

## ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணம்.

### 16. பதினாறுமுபந்யாஸம்—பிரபந்தாநுஸந்தான தீபிகாவிமர்சம்.

சார்வரிஹு புரட்டாசி ஐப்பசிமீ 1960 ஸெப்டம்பர் அக்டோபர்மீ வெளி வந்த ந்ருஸிம்ஹ ப்ரியா பத்ரிகையில் அபத்தங்களும் அஸம்பத்தங்களுமான வியாஸங்கள் பல வெளிவந்திருக்கின்றன. அவற்றைக் களைந்திடுவோமினி. விஷயப்பிழைகள் ஒருபுற மிருக்க, எழுத்துப் பிழைகளோ அபாரம். வடமொழியோ தென். மொழியோ எதிலும் தேர்ச்சி பெறாதவர்கள் புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொண்ட கதையாய் எழுதத் தொடங்கிவிட்டால் “[illegible] 𑌬𑌹𑍁𑌗𑍁𑌣𑌵𑌰𑍀𑌣𑌾 𑌹𑌿 [illegible]” என்று பட்டரருளிச் செய்த சொல்நயமும் பொருள்நலமும் எங்ஙனே வந்துபுகும். “ஸ்ரீ அஹோபில மடம்” என்று மகுடமிட்டு எழுதப்பட்டதோர் நீண்ட வியாஸத்தில் “𑌮𑌾𑌠𑌪𑌤𑍍𑌯𑌂 𑌯𑌤𑌿𑌃 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍” என்றொரு வசனம் காட்டப்படுகிறது. 𑌮𑌠𑌪𑌤𑍇𑌃 𑌕𑌰𑍍𑌮—𑌮𑌾𑌠𑌪𑌤𑍍𑌯𑌮𑍍 என்றாகுமேயல்லது மாடாபத்யம் என்றாவதற்கு வழியில்லை யென்கிற இச்சிறு விஷயத்தையுமறியாதவர்கள் ஏடுகளை நிரப்புகிறார்கள். இந்த வசனத்தைப் பாமரர்கள் மாடாபத்யம் என்று வழங்கி வருவதுண்டு. பண்டிதர்களென்று பெயர் சுமப்பவர்களும் அதையே பின்பற்றுகிறார்களென்றால் இவர்கள் விவேகிகளா? ப்ரஹ்மபுரம் ஸ்வாமியொருவர் ஸாதித்தார்—(மடாதிபதி) என்கிற சொல்லில் (டா) என்று நீண்டு கிடப்பதனால் அதற்குச் சேர மாடாபத்ய மென்றிருப்பதும் தகுதிதானே யென்று. மற்றொருவர் ஸாதித்தார்—𑌮𑌠𑍇 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃—𑌮𑌾𑌠𑌾𑌃; 𑌮𑌾𑌠𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌠𑌪𑌤𑍍𑌯𑌮𑍍; 𑌤𑌤𑍍 𑌯𑌤𑌿𑌃 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍. என்று. மேன்மேலும் அபத்யம் இல்லையானால் விஷ்ணுபூஜாபிவிருத்தி ஆகமாட்டாதாகையால் 𑌮𑌾𑌠𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌮𑍍 ஆகும்படி செய்து போரவேணுமென்று பொருத்தமாகத்தானே சொல்லியிருக்கிறது என்றார். ஹாஹா! இவர்களுடைய சொல்நலங்களும் பொருள் நயங்களும் பரம விலக்ஷணங்களென்பதற்கு இவ்வளவே போதும். ‘[illegible]’ என்னுமா போலே இவர்களெழுதுமவற்றை இவர்களினத்தாரே மெச்சவும் நச்சவும் ப்ராப்தியுடையார்.

பிரபந்தாநுஸந்தான தீபிகை யென்று ஒரு அபத்தச்சுவடியை 70, 80 ஆண்டுகட்குமுன் கடல்மங்கலம் வீராச்சி யென்பாரொருவர் [illegible]மாக எழுதி வெளியிட்டதுண்டு. அதை இப்போது ந்ருஸிம்ஹ ப்ரியை கிளப்பிப் புநர்முத்ரணம் செய்திருக்கின்றது. இது இன்னாருடைய க்ருதி என்பதை ஒருமூலையிலும் காட்டாமல் ஆதியோடந்தமாக அபத்த கதைகளைக் கூசாமல் பெய்திருக்கின்றது. இருக்கட்டும். திருவாய்மொழியில் (4—10—5) * இலிங்கத்திட்ட புராணத்தீரும் * என்கிற பாசுரத்தின் வியாக்கியானம் வெகு அற்புதம். ஆழ்வார் ‘இலிங்க புராணத்தீரும்’ என்றருளிச்செய்யாமல் * இலிங்கத்து இட்ட * என்றருளிச் செய்திருப்பதன் சுவையை யறிந்து நம்பிள்ளையருளிச் செய்ததாவது,

“ராஜஸமாயும் தாமஸமாயுமுள்ள புராணங்களிற் காட்டில் வாசி இதுவாயிற்று; அவ்வவற்றினுடைய நிஷ்கர்ஷம் அந்த அந்தப் புராணங்களினுடைய உபக்ரமத்திலே காணலாயிருக்கும். * யந்மயஞ்ச ஜகத் ப்ரஹ்மந் * என்று பொதுவிலே ப்ரச்நம்பண்ண * விஷ்ணோஸ் ஸகாஶாதுத்பூதம் * என்று கொண்டு கோல்விழுக்காட்டாலே பரிஹாரமாயிருக்கையன்றிக்கே, ஒரு வ்யக்தியை நிர்தேஶித்து அதுக்கு உத்கர்ஷத்தைப் பண்ணித்தர

வேணுமென்று சொன்னவனும் தமோகுணாபிபூதனாய்ச் சொல்லி, கேட்டவனும் தமோ
குணாபிபூதனாய்க் கேட்க, ஒரு லிங்க விஷயமாக இடப்பட்ட புராணமாயிற்று. இளி
கண்ணனைப் புண்டரீகாக்ஷனாகக் கவிபாடித்தரவேணுமென்றும், எருமையை யானை
யாகக் கவிபாடித்தர வேணுமென்றும் சொல்ல அப்படியே கவிபாடுவாரைப்போலே
யிருப்பதொன்றிறே அவர்களுக்கு இல்லாத உத்கர்ஷங்களையிட்டுச்சொல்லுமது. தான்
சொல்லப்புக்க வஸ்துவுக்கு உத்கர்ஷத்தை ஸாதிக்க மாட்டாதே மற்றுள்ளவற்றி
னுடைய உத்கர்ஷத்தைக் கழிக்கமாட்டாதே யிருப்பதொன்றாயிற்று.”

என்று. ஈட்டு ஸ்ரீஸூக்திகளை ஸங்க்ரஹித் தெழுதப் புகுந்த பரகால ஜீயர் பதினெண்ணா யிரப்படியில் இவ்விடத்திற்கு எழுதியுள்ளதும்

“யந்மயஞ்ச என்னும்படி ஸாமாந்யமாக ப்ரச்நம் பண்ணுமதன்றியே ஒரு வ்யக்தியை நிர் தேசித்து அதுக்கு உத்கர்ஷத்தைப் பண்ணித் தரவேணுமென்று தமோகுணாபிபூதன் அர்த்திக்க, சொல்லுமவனும் தமோகுணாபிபூதனாய் லிங்கத்துக்கு உத்கர்ஷத்தை ஏறிட் டுப் பண்ணினான்” என்றே.

அங்ஙனம் ஏறிட்டு இவர்களெழுதிவைத்த அபத்தச் சுவடிகளில் * ஹபாவஹூாஉஜதஃ * என்ற கணக்கிலே இப்போது பிரபந்தாநுஸந்தான தீபிகை தலைகாட்டுகிறது. இப்போது இதை வெளியிட்டவர்களின் கருத்து யாதெனில்; இவர்களின் அபத்த அஸம்பத்தங்களை யெல்லாம் நாம் விபுலமாக மூதலித்திருப்பவற்றுக்கு இந்த ப்ரபந்தாநுஸந்தான தீபிகை விடையளித்து விடுமென்றும்; இதனால் நம்முடைய வாதங்களெல்லாம் கண்டிக்கப்பட்டு விடுமென்றும் இவர்கள் கருதியது. உண்மையில் பேர்க்கவும் போராத நம்முடைய ஸகல வாதங்களுக்கும் வெற்றிக்கொடி நாட்டுவதற்கே இந்த ப்ரபந்தாநுஸந்தான தீபிகை இத் தருணத்தில் கிளம்பியதென்பதை ஊர்ஜிதப்படுத்துவோமாக. .... .... (16.)

## 17. பதினேழாமுபந்யாஸம். இதுவுமது.

இந்த ப்ரபந்தாநு ஸந்தான தீபிகையின் ஆரம்பத்தில் சில வரிகளுக்குப்பின்

“இவைகளின் விரிவைக் கலியனருள்பாடு ப்ரபந்தநிர்வாஹம் பன்னீராயிரப்படி மூவா யிரப்படி குருபரம்பரா ப்ரபாவம் நாலாயிரத்தனியன் வியாக்கியானம் ஆகிய இவை களிற் பறக்கக் கண்டு கொள்க.”

என்றெழுதப்பட்டுள்ளது. மேலெடுத்த வாக்யத்தில் பறக்க என்றே இவர்கள் எழுதியும் அச்சிட்டு மிருப்பது. (விரிவாக) என்று பொருளாகில் (பரக்க) என்று இடையினரகரமிட்டு எழுதியிருப்பர்கள். ‘காற்றிலே பறந்தோடும்படி’ என்னும் பொருளையே இவர்கள் விவக்ஷித்தார்களென்பதை தெய்வம் வ்யக்தமாக்கி வைத்தது. அது கிடக்க. மேலே உதாஹரித்த வாக்யத்தில் கலியனருள்பாடு என்றும், ப்ரபந்த நிர்வாஹம் என்றும், பன்னீராயிரப்படி மூவாயிரப்படி யென்றும், நாலாயிரத்தனியன் வியாக்கியான மென்றும் சில புத்தகங்கள் காட்டப் பட்டிருக்கின்றன. அவற்றில் கலியனருள்பாடென்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்ததாக ப்ரஸித்தம். அதில் இவர்களுடைய பொய்யுரைகளுக்கு ஆதாரலேசமும் கிடை யாது. இருந்தால் அந்த கலியனருள் பாட்டை அடுத்த ந்ருஸிம்ஹ ப்ரியா பத்ரிகை வெளி யிடட்டும். ப்ரபந்த நிர்வாஹம் என்று காட்டப்படுகிற மமநாரவிந்தமும் ந்ருஸிம்ஹ ப்ரியா விலேயே நறுமணம் கமழட்டும். பன்னீராயிரப்படி யென்பது வைதிக புத்ரவத் பிறப்பகத்தே மாண்டொழிந்ததாக இவர்களே எழுதி முடித்திட்டார்கள். மூவாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தை ஸ்ரீ பரகால மடம் அச்சிட்டு வைத்தது. அது படுகிறபாடு (ஸ்ரீராமாநுஜன்

140ல் வெளி வந்த) ராமசாமி ராமாயணத்தில் கண்டிருப்பதே. அந்த மடம் அதைத் தவருக அச்சிட்டுவிட்டதென்ருல் இனி இந்த மடம் தவறின்றிக்கே ஒழுங்காக அச்சிட்டு வெளியிடட்டும். அதுகாறும் அதைப்பற்றின பேச்சு வேண்டா. பிறவாதவர்களேயும் பிறந்து முடிந்து போனவர்களேயும் ஸாக்ஷியிடுவது பரிஹாஸ்ய மென்பதை அறியார்களா இவர்கள்?

முடிவாக, நாலாயிரத்தனியன் வியாக்கியானமென்று ஒன்று காட்டப்படுகிறது. அது யார் செய்தது? எங்குள்ளது? வஸ்து உள்ளதானல் அதையும் ந்ருஸிம்ஹப்ரியாவே வெளியிடட்டும். எழுதத் தெரியாதவர்களேயும் 'ஸ்ரீமதே வேதாந்தகுருவே நமஹா' என்று நீட்டுமவர்களேயும் எழுதக் கிளப்பிப் பத்ரிகையை ரஸா பாஸமாக்குவதிற் காட்டிலும் முன்னேர்கள் எழுதிவைத்திருப்பதாக இவர்கள்தாம் காட்டுகிற நூல்களே சுத்த ஆதியாக வெளியிட்டுப் பத்ரிகையை ஸுமனோமனோஹரமாக்குவது நலமன்ருே!

நாலாயிரத்தனியன் வியாக்கியானம் தங்களுக்கு முண்டென்று காட்டிக்கொள்ள விரும்பிய இவர்கள் ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் வியாக்கியானத்தைத் தமிழ் தெலுங்கு லிபிகளில் அச்கிட்டு வெளியிட்டிருக்கிருர்களே; அதிலிருந்து கக்கின சாயம் பலகால் வெளி வந்துளது. அதன் ஸாரம் கேளீர்; ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் நவீனமன்று, புராதனமே யென்று இவர்கள் வாதிக்கும்போது ஒரு காரணம் வெளியிட்டார்கள்: அதாவது, இந்தத் தனியனுக்கு வாத்ஸ்ய அஹோபிலா சாரியர் என்பவர் வியாக்கியானம் செய்திருப்பதாகவும், அவர் ஐந்நூறு வருஷங்களுக்கு முற்பட்டவ ரென்றும் ஆகவே இத்தனியன் நவீனமாயிருக்க முடியாதென்றும் எழுதினர்கள். அந்த வாத்ஸ்ய அஹோபிலாசாரியர் செய்த வியாக்கியானம் அச்சிடப்பட்டிருக்கிறது. அதில் அவருடைய அழுகை ஸ்பஷ்டமாகக் காண்கிறது. அதாவது, இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன்தான் கோவில்களிலெல்லாம் சொல்ல வேண்டும்; ஆனல் இதைச் சொல்லாமல் வேறு தனியனே [ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனே] எங்கும் வெற்றிபெற்றிருப்பதானது கலியின் கோலாஹலம்; பொருமைக்காரர்களின் துஷ்ட சேஷ்டை என்று நிந்தித்திருக்கிருர். இதனல் இந்தத் தனியனுடைய பங்கமே அவராலும் வெளியிடப்பட்டதாயிற்று. உண்மையில் அந்த அஹோபிலாசாரியார் சில வருஷங்களுக்கு முன்பிருந்தவரே யொழிய 500 வருஷங்களுக்கு முன்பிருந்தவருமல்ல. இந்த பாத்ரத் தனியனைப் புராதனமென்று காட்டிக்கொள்வதற்கு இவர்கள் படுகிறபாடு வாசாமகோசரம். எப்பாடு பட்டாலும் அது நவீனமென்பதே கல்வெட்டாகி நிற்கிறது. ராமாநுஜா பாத்ரம் ஓரிடத்திலும் செல்லுபடியாகவில்லை யென்றும் எங்கும் ஸ்ரீசைலேச தயாபாத்ரமே ஓங்கிவருகிற தென்றும் ஸ்பஷ்டமாக வெடுத்துக்காட்டி, தென்கலேயார்களே எம்பெருமான் தீவ்ரமாக தண்டிக்க வேணுமென்று பெருங்குரலிட்டு அழுதிருக்கிற வாத்ஸ்ய அஹோபிலாசார்யருடைய வியாக்கியானத்தைக் கண்ட பாடம் செய்து ஸதா அநுஸந்திப்பதுதான் இவர்களுக்குத் தஞ்சமாகக் கடவது. 'அந்த வாத்ஸ்ய அஹோபிலாசார்யர் பரகாலமடத்துப் பதினைந்தாவது பட்டக்காரரிடத்தில் காலக்ஷேபம் செய்தவர் என்றெழுதுகிறது அந்த மடம். அஹோபிலாசார் காலத்தில் ராமாநுஜா பாத்ரம் பங்கப்பட்டதே யொழிய பரிசு பெறவில்லை யென்பதுதான் அவருடைய விபுலநிந்தோக்திகளால் விசதமாகிறது. ஆக, இவர்கள் காட்டும் நவீநகல்பிதங்களான நூல்களினல் இவர்களின் பங்கமொழிய வேருென்றும் தேருதென்பது வெளிப்படை.

தாதாசாரியர்கள் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானர் ஸன்னிதியில் மௌரவமாக மரியாதைகளே யநுபவித்துக் கொண்டிருந்த காலத்தில் [அதாவது, மணவாளமாமுனிகளிடத்தில்

த்வேஷம் கொள்ளாமலும் அபசாரப்படாமலுமிருந்த காலத்தில்] *ஸீராருமெதிராசர் திருவடிகள் வாழி* இத்யாதிகளான வாழி திருநாமப் பாசுரங்கள் மூன்றையும் கோஷ்டியார் ஸேவிக்கும்போது அஸூயை கொள்ளாமல் ஆதரம் காட்டி வந்தார்கள். கண்டா சேஷாசாரி கலஹங்களுக்குத் தொடக்கம் செய்த காலத்தில் இந்த வாழி திருநாமப் பாசுரங்கள் மணவாள மாமுனிகளருளிச் செய்த ஆர்த்திப் பிரபந்தத்திலுள்ளவை யென்றறிந்து, இவை இங்கே புதிதாகச் சொல்லப்படுகின்றன வென்று ஆக்ஷேபித்தும், தான்வேறு ச்லோகங்கள் சொல்லிக் கூச்சலிட்டும், இதற்காக 40 ரூ. அபராதம் விதிக்கப்பட்டுச் செலுத்தி முடிந்தார். இதெல்லாம் நியாயாலய ரிகார்டுகளில் அசைக்க முடியாதபடி ஏறியுள்ளவை. இந்த பிரபந்தாநுஸந்தான தீபிகை யெழுதுவது என்னவென்றால்

"முன்னொருகால் பிள்ளான் ஆச்சான் ஆண்டான் இவர்களருளிச்செய்த *ஸீராருமெதிராசர்* அறுசமயச் செடி *சங்கரபாஸ்கர* ஆகிய இம்மூன்று பாட்டுகளையும் ஸ்ரீபெரும்பூதூரில் நித்யமாக அநுஸந்திக்கும்படிக்கு நைனாராசாரியரும் ப்ரமதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரும் கட்டளையிட்டதாக"

எழுதுகிறது. வெட்கம் சிக்கமென்பது இப்படியும் மறைந்தொழியுமா? இதற்குமேல்

"*கோதை பிறந்தவூர்* பாதகங்கள் தீர்க்கும்* என்கிற இரண்டு பாசுரங்களைத் திருப்பாவை நாள் பாட்டு சாத்தினபின்பு சில திவ்ய தேசங்களில் அநுஸந்தித்துக்கொண்டு வருகிறார்கள். அங்குள்ளார்களும் தேசிக ப்ரபந்தம் சாத்தும்போது அவ்விரண்டு பாசுரங்களை அநுஸந்தியாமல் திருப்பாவை நாள்பாட்டுக்குப் பின்பு தேசிகர் பிரபந்தத்தையே சாத்திக்கொண்டு வருகிறார்கள்"

என்றெழுதுகிறது. இந்த வாக்யத்திற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? சில திவ்ய தேசங்களென்றால் அவை எவை? அங்குள்ளார்களுமென்பதனால் விவக்ஷிதர்கள் யார்? என்று விசாரங்களைச் செய்தால், சில தேவாலயங்களில் இவர்கள் ஈட்டிப் போட்டிச் சண்டை தொடங்கின காலத்தில் பிரபந்தசாரம் பிள்ளையந்தாதி முதலானவை போலே இந்த தீபிகையும் கல்பித்தெழுதிவைக்கப்பட்டதென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். ... ... (17.)

## 18. பதினெட்டாவது உபந்யாஸம்.—யதிகளின் ஸஞ்சாரப்பெருமை.

"ஸ்ரீ அழகிய சிங்கரின் ஸஞ்சாரக்ரமம்" என மகுடமிட்டுப் பிரசுரம் செய்துள்ளதொரு சிறுவியாஸத்தில்—, 11-9-60 தேதியில் குடவாசல் திருவாரூர் போவதற்கு முன் ஓரிடத்தில் தங்கினதாக எழுதிவருகையில் அங்கே

"திருவெண்ணழி ப்ரதக்ஷிணமானவுடன் ஸ்ரீ அழகிய சிங்கர் அரத்தமண்டபம் எழுந்தருளியிருந்து.........ஸ்ரீராமாநுஜ தயாபாத்ரம் சொல்லி உபக்ரமித்து நித்யாநுஸந்தானம் பூராவும் ஸேவித்து முடித்து ப்ரஸாத விநியோகங்களும் ஸ்ரீ வேதாந்த தேசிகன் வாழி திருநாமம் ஸ்தோத்ரபாடங்களுடன் அதிவிமரிசையாக நடந்தேறியது"

என்றெழுதப்பட்டுள்ளது. இங்கே ஒரு கதை நினைவுக்கு வருகிறது. ஒருவர் ஆங்காங்கு நடக்கும் ததியாராதன கோஷ்டிகளில் புஜிக்கப் போவராம். அநபிஜாதரான அவரை ஓரிடத்திலும் பங்க்தியில் சேர்த்துக்கொள்ளாமல் நடையிலே உட்காரவைத்துச் சோறிடுவர்களாம். அந்த அவமானம் பொறுக்கமாட்டாத அவர் ஒன்று செய்தாராம்; அஃதென்னவென்றால், யாராவது அவருடைய க்ருஹத்தில் வந்து 'அவர் இருக்கிறாரா?' என்று வினவினால் "உள்ளே முதல் பங்க்தியில் அமுது செய்து கொண்டிருக்கிறார்" என்று விடை கூறும்படி தேவியாருக்கும் மக்களுக்கும் கட்டளையிட்டு வைத்தாராம். அதன்படி அவர்கள்,

யார் எந்த ஸமயத்தில் வந்து கேட்டாலும் "உள்ளே பெருமாள் ஸன்னிதியில் முதல் பங்க்தியில் அமுது செய்து கொண்டிருக்கிறார் ஸ்வாமி" என்று விடை கூறிக்கொண்டிருப்பர்களாம். இக்கதை மெய்யாயிருக்குமோ என்கிற நமது நெடுநாளைய ஸந்தேஹம் தீர்ந்துவிட்டது. இவர்கள் கல்பித்த பாத்ரத்தனியனில் ஸ்ரீஶப்தயோகம் இல்லையே யென்கிற குறையையும் இவர்கள் எளிதாகத் தீர்த்துக் கொண்டாரானார்கள் "ஸ்ரீராமாநுஜதயாபாத்ரம் சொல்லி உபக்ரமித்து" என்று கம்பீரமாக வெழுதியதனால். .... .... .... (18)

## 19 பத்தொன்பதா முபந்யாஸம்—சுடராழிவ்யாஸவிமர்சம்.

இதே ந்ருஸிம்ஹப்ரியாவில் "சிறிய திருமடல் பாடல்கள்" என மகுடமிட்டுப் பிரசுரம் செய்யப்பட்டுள்ள வியாஸம் வெகு அற்புதமானது. இதை யெழுதினவருடைய பெயர் சுடராழி யென்பதாம். D. T. என்பவர் திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பிரித்துக் காட்டிச் செய்த மஹோபகாரத்திற்கு இன்னது கைம்மாறென்று தெரியாமல் திகைத்து நிற்கிறாராம் இந்த சுடராழி ஸ்வாமி. தலையல்லால் வேறில்லை யென்கிறார். அவருடைய தலைவிதிக்குத் தப்பிப்பது தவிர வேறில்லை யென்று பொருளா மிதற்கு. ஏன்? அவர்க்கு நித்ய போக்ய அம்ருதமாக அவதரித்துள்ள உபந்யாஸ விம்சதியை நிச்சலும் அவர் திருச்செவி சாத்தும்படி வாசிப்பது தக்க கைம்மாறு செய்ததாகுமே. "தமிழிலக்கணப்படி ஒரே பாட்டான சிறிய திருமடலில்" என்று தமது கையாலெழுதிக் கொண்டே காடுபாய்ந்து எழுதுவதும் ஒரு தலைவிதிதான். மடலூரப்புகுந்த ஆழ்வார் இலக்கணவரம்புக்கு உட்பட்டுப் பாட்முடியாமல் போய்விட்டதாம். கைக்கிளைக்காமங் கொண்டு ஆழ்வார் புலம்புகிறாராம். அதனாலும் திருமடலைப் பலபாட்டுக்களாகவே பிரிக்க வேண்டுமாம். முடிவில் எழுதுகிறார்கள்—

"மடல்களைப் பலபாட்டுகளாகப் பிரித்தது ஒருவகையில் தகும் என்று பெருமாள்கோயில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும் இசைந்துள்ளார்" என்று. இந்த ஒரு அஸ்த்ரமே போதுமேயிவர்களுக்கு. இதையே கொட்டை கொட்டையான எழுத்தில் அச்சிட்டு ஊர்தோறும் வீதிதோறும் ஒட்டவைத்து க்ருதக்ருத்யர்களாகலாமிவர்கள். (19)

## 20. இருபதாவது உபந்யாஸம்—நிகமனம்.

இந்த உபந்யாஸ விம்சதியின் முகவுரைக்கு முன்னே (ஸ்ரீ ராமாநுஜன் 140ல் பக்கம் 6ல்) "முடிவாக இந்த விஷயமொன்று கவனிக்கத்தக்கது" என்று மகுடமிட்டு நானெழுதியிருப்பதை மீண்டும் இங்கு நினைப்பூட்டுகிறேன். அதாவது,

"மாத்வ மடங்களில் உடுப்பி ஸ்ரீபண்டாரகேரி மடமென்பது ஒன்று. இந்த மடாதிபதி தற்காலம் பெங்களூரில் வாழ்கிறார். அங்கிருந்து நேற்று 1—9—60 தேதியில் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒரு சிறு விளம்பரமச்சிட்டு நாடெங்கும் பிரசுரம் செய்திருக்கிறார். விஷயமென்ன வென்றால், ப்ரஹ்ம ஸ்ரீ அனந்தக்ருஷ்ணசாஸ்த்ரிகள் மத்வமத க்ரந்தமொன்றை தூஷித்து ஏதோ எழுதி யிருக்கிறாராம். அது விரைவில் கண்டிக்கப்படுமென்று எழுதிவிட்டு

"நீர் எழுதியிருக்கிற தூஷணைகளை பண்டிதர்களின் முன்னிலையில் ஸரியானதென்று ஸ்தாபித்து விடுவீரானால் ஒவ்வொரு தூஷணத்திற்கும் ஆயிரம் ரூபாய் வீதம் த்ரவிய ராசியை உமக்குப் பரிசளிக்கக்கடவோமென்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறோமிதனால்"

என்று தெரிவித்திருக்கிறார்கள் அந்த மாத்வ மடாதிபதிகள். நாமும் (P.B.A.) இப்படி

ப்ரதிஜ்ஞை பண்ணத் தடையில்லை. ஆனால் மடாதிபதிகளைப்போல் பொருட்குவியல் கொடுக்க சக்தியில்லை. அதற்கு பதிலாகப் பலநூற்றுக் கணக்கான தோப்பிக்கணம் ஸன்னிதி வீதியில் போடத் தடையில்லை. ஸ்ரீ. D. ராமஸ்வாமி ஐயங்கார் தாம் எழுதியிருக்கிற தென்னசார்ய தூஷணைகளைப் பண்டிதர்கள் முன்னிலையில் ருஜுப்படுத்தினால்.

(1) தேசிகர் காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யபதவியில் வாழ்ந்தவர்களுக்கு ஸ்ரீபாஷ்ய பரிசயம் கிடையாது. (2) அந்த ஆசார்யர்களும் தச்சிஷ்யர்களும் தேசிகனைப் பல வகையாக ஹிம்ஸித்தார்கள். (3) ஆசார்ய ஹ்ருதயகாரர் பொருமைகொண்டு தேசிகனோடு போட்டியிட்டார். (4) திருவாய்மொழியின் வியாக்கியானங்களான 9, 12, 24, 36 ஆயிரப்படிகளிலுள்ள தோஷங்களை யெல்லாம் தேசிகர் களைந்துவிட்டார்.

என்று இவர் (D. R.) எழுதியுள்ள இந்த நான்கு தூஷணைகளை இவர் ஸமர்த்திக்க முன் வருவாரா? சே. கி. வ. என்றும், ஐயா, ஸ்ரீநி....என்றும் அபத்தக்கையொப்பங்களை அறவே விட்டொழித்து நேரான பெயருடன் நேர்மையாக விஷயம் சொல்லுவாரா?
ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியர், 3—9—1960." என்றெழுதியிருந்தோம்.

மேலே உதாஹரிக்கப்பட்ட மாத்வமடாதிபதியின் விளம்பரத்தைக் கண்ட ப்ரஹ்மஸ்ரீ அனந்தக்ருஷ்ண சாஸ்த்ரிகளவர்கள் 12–9–60 தேதியில் பெங்களூரில் அந்த மடாதிபதியிடம் நேராகச் சென்று இரண்டு நாள் அங்கே வஸித்து அந்த மடாதிபதிகளிடம் வார்த்தையாடி "இப்போது எனக்கு அவகாசமில்லை; நான் காஶீயாத்ரை போகவேண்டியிருக்கிறது; எட்டு மாதங்கள் எனக்கு அவகாஶமளிக்கவேணும்; அடுத்த ஜூன் மாஸத்தில் நாம் ஶாஸ்த்ரார்த்த ஸபை வைத்துக் கொள்ளலாம்; இப்போது எனக்கு ஸௌகரியமில்லாமையால் செலவு பெற்றுக்கொண்டு போகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டுப் போனாராம். இதை அந்த மடாதிபதிகள் 12–10–60 தேதியினன்று ஸம்ஸ்க்ருத பாஷையில் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அதில் எழுதியிருப்பதாவது, 'சாஸ்த்ரிகளே! நீங்கள் காலதாமதம் செய்வதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது; இதை நேரிலேயே சொல்லியிருக்கிறோம்; இப்போது பலரறியப் பிரசுரமும் செய்கிறோம்.' இத்யாதிகள் எழுதியிருக்கிறார்கள். இந்த மடாதிபதிகள் முதன் முதலாக வெளியிட்ட விளம்பரத்தை ஸ்ரீ அனந்தக்ருஷ்ண ஶாஸ்த்ரிகள் அலக்ஷியம் செய்யாமல் 'நாம் பதில் சொல்லித் தீரவேண்டியது அவசியமே' என்று தம்முடைய கடமையை யுணர்ந்து மடாதிபதிகளிடம் நேரில் சென்று எனக்கு அவகாசமளிக்கவேணுமென்று கேட்டுக் கொண்டது ப்ராமாணிகமான வழி, ருஜுவான ஸரணி. நம்முடைய ஸம்ப்ரதாயத்தையும் ஸதாசாரியர்களையும் வாயாரமனமார தூஷிக்குமிவர்கள் இத்தகைய ப்ராமாணிக ஸரணியை அவலம்பித்து விடையிறுக்க முன்வருமவர்களல்லர். இவர்கள் அஸ்தானே அகாண்டே செய்திருக்கிற தூஷணைகளை உலக முணர எடுத்துக்காட்டியிருக்கிறோம். "அப்படி நாங்கள் தூஷித்தது பிசகுதான்." என்று க்ஷமை வேண்டுவதோ, "நாங்கள் தூஷித்ததை இதோ ஸ்தாபிக்கிறோம்" என்று பதில் விஷயங்களை யெழுதிப் பிரசுரம் செய்வதோ இரண்டத் தொன்று இவர்களுக்கு உற்றதாகும். செ. கி. வ. என்றும், ஐயா. ஸ்ரீநி என்றும் அபத்தக் கையொப்பமிட்டு அஸம்பத்த ப்ரலாபங்கள் வெளியிட்டவற்றுக்கு அநுதாபமும் காட்டவேணும். ... ... ... ... (20)

---

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் எழுதிய
உபந்யாஸவிம்சதி முற்றிற்று.

---

Rgd. No. 2975

ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) கராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)



If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Vangeepuram Raghava
charya Swamy
MELKOTE
(MYSORE)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press
Sannidhi Street, L. Kancheepuram.